


# அஹ்லெசுன்னத்

இஸ்லாமியக் கொள்கை
விளக்க மாத இதழ்

16, மதுரை ரோடு,
திருச்சி - 620 008.
இந்தியா.
போன் : 0431-701685

தனிப்பிரதி
ரூ.8/-

உள்நாடு ஓராண்டு சந்தா
ரூ. 95/-

வெளிநாடு ஓராண்டு சந்தா
$20

ஆசிரியர் :
F.M. இப்ராஹிம் ரப்பானி

செக் மற்றும் டிராப்டுகள்
அனுப்புகிறவர்கள்
ரப்பானியா பிரிண்டிங் பிரஸ்
என்னும் பெயருக்கு கிராஸ் செய்து
அனுப்ப வேண்டுகிறோம்.



அல்லாஹ்வை மனதார ஏற்று அவனது ரஸூல் மற்றும் நபித் தோழர்களின் வழி முறையான "சுன்னத்தை" முழுமையாக பின் பற்றி மார்க்கத்தை முறைபடுத்தித் தந்த "இமாம்களுக்குக்" கட்டுப்பட்டு நல்லோர்களை மதித்து வாழ்பவரே "அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தினர்" எனப்படுவர்.

## உள்ளே,...

அஹ்ல் 7 சுன்னத் 5
ஆகஸ்ட் 2001 ஜமாதில் ஆகிர் 1422



கொழும்பில் நடைபெற்ற விவாதத்தை வெளியிட எண்ணி முடியாமல் போனதால் எந்தத் தலைப்பில் விவாதம் நடைபெற்றதோ அதையே ஒரு நூலாகத் தொகுத்து உங்கள் முன் சமர்ப்பிக்கிறோம். இன்ஷாஅல்லாஹ் அடுத்த மாத இதழில் விவாதம் முழுவதும் வெளிவரும் என்பதை தெரிவித்துக் கொள்கிறோம். அன்புடன், ஆசிரியர்.

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# تقليد الأئمة

# இமாம்களின் அவசியம்

இன்று நம்மிடையே சில வருடங்களாக முஸ்லிம்களில் ஒரு சாரார் இமாம்கள் தேவையில்லையென்றும், குர்ஆன், ஹதீஸாகிய இரண்டு மட்டுமே நமக்கு பின்பற்றிச் செல்லப் போதுமான ஒன்றெனவும் கூறியும் எழுதியும் வருகின்றனர்.

எனினும் அவர்களை நாம் நெருங்கிச் செல்லும் போது "நாங்கள் இமாம்கள் தேவையில்லையென மறுக்கவில்லை. ஒரேயொரு இமாமை மட்டும் பின்பற்றுவதைத்தான் நாங்கள் மறுக்கிறோம்" பின்னும் எந்தெந்த இமாமுடைய மத்ஹபில் நமக்கு நன்மை தரத்தக்க விஷயங்கள் இருக்கிறதோ, அவற்றையெல்லாம் நாம் எடுத்துக் கொள்ள வேண்டுமெனக் கூறுகின்றனர்.

அடுத்து இன்னும் சிலர் "இமாம்களால் வகுக்கப்பட்டுள்ள சட்டங்களில் சில முழுக்க முழுக்க குர்ஆனுக்கும் ஹதீஸுக்கும் முரண்பட்டதாயிருப்பதால் அவைகளையெல்லாம் நாம் நீக்க வேண்டும் என்று விளக்கம் தருகின்றனர்.

ஆனால் இப்படிச் சொல்லும். இவர்களின் அசல் நோக்கம் உண்மையில் இமாம்களை, அவர்களால் வகுத்தளிக்கப்பட்டுள்ள ஷரீஅத்துச் சட்டங்களை நிராகரித்து முதுகுக்குப் பின்னால் தள்ளி விட வேண்டுமென்னும் நோக்கத்தைத் தவிர வேறு எந்த நோக்கமும் இவர்களுக்கு இருப்பதாகத் தெரியவில்லை.

காரணம் ஒரு இமாம் என்னும் முஜ்தஹித் முத்லக்கால் சீரமைக்கப்பட்ட ஷரீஅத்தின் சட்டமொன்று குர்ஆன் ஹதீஸுக்கு முற்ற முழுக்க முரண்பட்ட ஒன்றென எப்போது இவர்களால் சொல்லப்பட்டதோ, அப்போதே இவர்கள் பார்வையில் அந்த இமாம் தரம் தாழ்ந்து போய் விடுகிறாறாகையால் இது அந்த இமாமை நிராகரிப்பதன்றி வேறு என்னவாயிருக்க முடியும்?

அத்துடன் ஒரு அரபிக் கலாசாலையில் சென்று கல்வி கற்காத, அல்லது அக்கலாசாலையில் ஒரு சில நூல்களை மட்டும் பயின்று வெளிவந்துள்ள ஒரு மனிதர், ஒரு சமூகத்தின் வழிகாட்டியான இமாமின் மீது குறை காண்கிறாரென்றால் இது அந்த இமாமை மதித்துப் பின்பற்றுவதன் அடையாளமா? அல்லது நிராகரிப்பதன் அடையாளமா என்பதை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இந்த இடத்தில் நமக்கு ஒரு சந்தேகம் தோன்றலாம். இமாம்களும் மனிதர்கள் தானே! அவர்கள் தவறே செய்யும் சாத்தியமற்றவர்களா? என்று.

ஆனால் இங்கு நாம் ஒரு விஷயத்தை நன்கு கவனத்தில் வைத்தல் மிக மிக அவசியம். அதாவது; இறைவனின் தூதர் பெருமக்களான நபிமார்களும் தமது வாழ்வில் சிற்சில தவறுகளை செய்தார்கள் என்று சொல்லப்படுவதால், அந்நபிமார்களும் தமது சமூகத்தவருக்கு தவறான வழியை காட்டி இட்டுச் சென்றனர் என்று சொல்லலாமா? இது இஸ்லாமியக் கொள்கைக்கு முற்றிலும் முரண்பட்ட ஓர் கொள்கையாகும்.

இங்கு மற்றோர் விஷயத்தையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். அதாவது,...

"என் உம்மத்திலுள்ள முஜ்தஹிதுகள் ஒரு சட்டத்தை இயற்றித் தரும்போது அச்சட்டம் அந்த முஜ்தஹிதை பின்பற்றும் மக்களுக்கு நன்மை பயப்பதாக இருப்பின் அதற்காக அந்த முஜ்தஹித் இரண்டு கூலியைப் பெறுவார்".

அவ்வாறின்றி அச்சட்டம் மக்களுக்கு தீமை பயப்பதாக இருப்பின் அதற்காக அந்த முஜ்தஹித் ஒரு நன்மைக் கூலியை பெறுவார் என்பதாக அண்ணல் நபிகளார் சொல்லியிருப்பதை கவனிப்போமாயின்,...

ஒரு இமாம் தவறான, மக்களுக்கு தீமை பயக்கக்கூடிய சட்டத்தையே இயற்றியிருந்தாலும் அவர் தண்டிக்கப்படுவதற்குப் பதிலாக நன்மையளிக்கப்படுகிறாரெனில், ஒரு இமாமின் தவறை நாம் சுட்டிக்காட்ட வேண்டிய அவசியமென்ன வந்தது?

ஆக ஒரு இமாம் தவறான ஒன்றை கற்பித்தாலும் அவர் நன்மையாளரே! அத்தவறான சட்டத்தை பின்பற்றி நடக்கின்ற மக்களும் நன்மையைப் பெறுகின்றவர்களே!

எனவே இமாம்களை குறை கூறுகின்றவர்களின் உண்மை நோக்கம் இமாம்களது தவறை சுட்டிக்காட்டி மக்களை திருத்துவதல்ல. மாறாக இமாம்களை மதிப்பிழக்கச்செய்து அவர்களின் கண்ணியத்தை சிதைப்பதொன்று தான் இவர்களின் அடிப்படை நோக்கமென்பதை நாம் விளங்கிக் கொள்ளலாம்.

இன்னும் சமீபமாக இப்பிரச்னை பெரும்பாலான ஊர்களில் சர்ச்சைக்கிடமாக்கப்பட்டு வருவதால் ஒரு இமாமை பின்பற்றுவதன் அவசியம் பற்றியும், இமாம்களை எந்தெந்த பிரச்னைகளில் நாம் பின்பற்ற வேண்டுமென்பது பற்றியும் தெளிவாக நாம் புரிந்து கொள்ளக்கூடிய வகையில் இதுபற்றிய சிறு நூலொன்றை நாம் இப்போது உங்கள் முன் வைக்கிறோம். படித்துப் பயனடைய வேண்டுகிறோம்.

-அன்புடன், ஆ-ர்.

## எதில் தக்லீத் செய்வது நம்மீது கடமை?

தக்லீத் என்பதற்கு பின்பற்றுதல் என்று சொல்லப்படும். இது மூன்று வகைப்படும்.

**(1) அக்காயிதுகள் (கொள்கை)**

**(2) இமாம்களது ஆராய்ச்சிக்கு இடமின்றி குர்ஆன் ஹதீஸில் தெளிவாக சொல்லப்பட்டுள்ள சட்டங்கள்.**

**(3) குர்ஆன் ஹதீஸைக் கொண்டு இமாம்களது ஆராய்ச்சியின் மூலம் வகைப்படுத்தப்பட்ட சட்டங்கள்.**

## முதல் வகை தக்லீத் அகாயித்

இஸ்லாமிய மார்க்கத்திற்கு அடிப்படை ஆதாரமாயுள்ள கொள்கைக் கோட்பாடுகளில் யாரையும் பின்பற்றி நடத்தல் கூடாது.

## தக்லீத் என்பதன் கருத்து

ஒருவர் சொல்லித் தரும் விஷயத்தை அப்படியே ஏற்று, அதற்குரிய ஆதாரத்தை தேடாது பின்பற்றுவதுடன், அவர் போதிக்கும் தகுதியுடையவர் என்று மனப்பூர்வமாக நம்பி அவரது வழிகாட்டுதல் படி நடப்பதற்கு தக்லீத் என்று சொல்லப்படும்.

மேலும் இறைவன் யாருக்கு அருள் பாலித்தானோ அவர்களது

வழியில் எம்மையும் நடத்துவாயாக என்று இறைவனை நாம் தொழுகையில் ஸூரத்துல் பாத்திஹாவை ஓதும்போது பிரார்த்திக் கிறோம்.

இங்கு இறைவனது அருள் பெற்றவர்களின் வழியில் செல்வதன் பொருள் யாதெனில், அந்த நல்லருள் பெற்றோரை ஏற்று அவர்கள் மீது சந்தேகம் கொள்ளாது அவர்களின் போதனையை எந்த ஆதாரத் தையும் தேடாது எடுத்து நடப்பதாகும். இதன் பெயர்தான் தக்லீத்.

அவ்வாறின்றி அந்த நல்லருள் பெற்றோரை பதம் பார்க்கவோ அல்லது அவர்கள் சொல்லியவை சரியா என்று ஆராயவோ முற்பட்டோமேயானால் அவர்களின் கடைக்கண் பார்வை நம்மை விட்டும் நீங்கி விடுவதோடு நாம் பாதை மாறிப்போய் விடுவோம்.

மேலும் ஷைகு அப்துல் ஹக் முஹத்திஸ் தெஹ்லவி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் தமது "அகாயிதே இஸ்லாம்" என்னும் நூலில் 11ம் பக்கத்தில்,...

**யார் தமது வாழ்வில் பிக்ஹை ஏற்றுக் கொள்ளவில் லையோ, அவன் பாஸிக்காக (பெரும்பாவியாக) இருப்பான் என்று கூறியுள்ளார்கள்.**

பின்னும் ஒரு ஆதாரத்தை தேடுவதின்றி ஒருவரது சொல்லை ஏற்று நடப்பதன் பெயர்தான் தக்லீத் என்பதாகும். இது பிரிவு வகையினைச்சார்ந்த செயல்களில் மிக மிக அவசியமாகும். இனி மார்க்கத்தின் அடிப்படையான கொள்கைகளில் ஒருவரை பின்பற்றி நடத்தல் கூடாது. (தப்ஸீர் ரூஹுல் பயான்)

ஒருவர் நம்மிடம் வந்து, நீங்கள் இறைவனையும், நபித்துவத்தை யும் நம்பிக்கை கொண்டிருக்கிறீர்களே! அதை எப்படி நம்பியுள்ளீர் கள்? என்று வினவினால்,...

அதற்கு இமாம் அபூ ஹனீபா அல்லது இமாம் ஷாபி ரஹிம ஹுமல்லாஹ் சொன்னார்களென்றோ அல்லது பிக்ஹுல் அக்பர் போன்ற நூல்களில் சொல்லப்பட்டிருப்பதைப் போல் நம்பிக்கை கொண்டுள்ளோம் என்றோ சொல்லக் கூடாது. மாறாக ஏகத்துவம் மற்றும் நபித்துவம் பற்றி நான் ஆராய்ந்து நம்பியுள்ளேன் என்று தான் சொல்ல வேண்டும். காரணம் இவை இஸ்லாத்தின் அடிப்படை

கொள்கையாதலால் இவைபற்றிய விஷயத்தில் பிறரை தக்லீத் செய்து பின்பற்றுதல் கூடாது. இது தவிர்க்கப்பட்டதாகும்.

இதைப்பற்றி துர்ருல் முக்தார் என்னும் நூலில்,...

மார்க்க அனுஷ்டானங்களான கிரியைகளைத் தவிர கொள்கை போன்ற விஷயங்களில் பிறரை தக்லீத் செய்யாது அதற்குரிய ஆதாரங்களைத் தேடி நம்பிக்கை கொள்வது வயது வந்த ஒவ்வொரு சுவாதீனமுடையவர்கள் மீதும் வாஜி பாகும். இதுதான் அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தின ரின் கொள்கை. இவர்களைத்தான் அஷ்அரிய்யாக்கள், மாத்துருதிய்யாக்கள் என்று சொல்லப்படும் என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

இன்னும் திருமறையில் இறைவன்,...

உம்மிடம் இணை வைப்போரில் நின்றும் எவரும் அப யம் தேடினால் (அவருக்கு) இறைவனின் திருவசனங்களை கேட்குமளவிற்கு அபயம் அளிப்பீராக. (பின்னர் அவர் ஈமான் கொள்ளாவிடின்) அவரை அபயமான இடத்திற்கு (அவர் நாட்டிற்கு) அனுப்பி வைப்பீராக என்றும்,...

தப்ஸீர் கபீரில் இவ்வசனத்தைப் பற்றி விளக்கம் தரும்போது,...

(ஈமான் கொள்வதற்கு) தக்லீத் செய்வது (ஒருவரை பின் பற்றுவது) மட்டும் போதாது. (மாறாக தமது விசுவாசத்திற் குரிய) ஆதாரத்தைத் தேடி சிந்தனை செய்து நிர்ணயம் கொள்வது அவசியமென்பதை மேற்கண்ட திருமறை வசனம் சுட்டிக் காட்டுகிறது என்றும் கூறப்பட்டுள்ளது.

இதுபோன்றே ஐவேளை தொழுகை, அதனுடைய ரக்அத்துக் களின் எண்ணிக்கை, ரமலானின் நோன்பு, அதில் உண்ணாது குடிக்காதிருத்தல் ஹராம் என்பன போன்ற சட்டங்கள் தெள்ளத் தெளிவாக வந்திருப்பதால் இதுபற்றிய விஷயங்களிலும் இமாம் அபூஹனீபா அல்லது இமாம் ஷாபிஈ ரஹிமஹுமல்லாஹ் அவர்கள் சொன்னார்கள். அல்லது பிக்ஹுல் அக்பர் போன்ற சட்ட நூல்களில்

வந்திருப்பதால் இதனை நாங்கள் நம்புகின்றோமென்றும் சொல்லக் கூடாது.

இனி குர்ஆன் ஹதீஸ் போன்றவற்றில் தெளிவாக விபரிக்கப் படாத மார்க்கச் சட்டங்கள் போன்றவைகளை குர்ஆன் ஹதீஸ் இஜ்மாவுல் உம்மத்தான அண்ணல் நபிகளாரின் உம்மத்தவர்கள் ஒருங்கிணைந்து ஏகோபித்து முடிவு செய்தவைகளை அடிப்படை ஆதாரமாகக் கொண்டு இமாம்களால் ஆராய்ந்து இயற்றப்பட்ட சட்டங்களை அப்படியே ஏற்று தக்லீத் செய்வது ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் இன்றியமையாத கட்டாயக் கடமையாகும்.

அடுத்து எதில் தக்லீத் செய்வது நம்மீது கடமை? எதில் கூடாது? எதில் நன்மை? எதில் தடை? என்பன போன்ற விஷயங்களை நாம் தெளிவாகத் தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டும். இல்லையெனில் இன்று இமாம்கள் தேவையில்லையென மறுத்துக் கொண்டுள்ள நஜாஸத்துக்கள் நம்மிடம் வந்து,...

நீங்கள் குர்ஆன் ஹதீஸைக்கொண்டு அமல் செய்வதில்லையே! இமாம்களை மட்டும்தானே பின்பற்றுகிறீர்கள். அவ்வாறாயின் இதுபற்றி குர்ஆன் ஹதீஸை எதற்காக ஆதாரம் காட்டுகிறீர்கள்? என்று கேள்வி கேட்பார்கள். ஆனால் அவர்களது கேள்விக்குரிய பதில் அவர்களது கேள்வியிலேயே இருப்பதை இந்த மூடர்கள் உணர்வதில்லை.

அதாவது தொழுகை கடமையாக்கப்பட்ட ஒன்றென்பதில் நாங்கள் எந்த இமாமையும் பின்பற்றுவதில்லை. இத்தகைய தக்லீத் எங்களிடமும் கூடாது. மேலும் நாங்கள் தொழுகையின் உட்பிரிவு களில்தான் இமாம்களை தக்லீத் செய்கிறோமேயன்றி தொழுகை எங்கள் மீது கடமை என்பதில் அல்ல. இன்னும் நாங்கள் குர்ஆன், ஹதீஸை மேற்கோள் காட்டுவது எமது இமாம்களது வழிமுறைகள் சரியானவைதான் என்பதற்கு ஆதாரமேயன்றி எமது தக்லீதுக்கல்ல.

மேலும் இமாம்களின் கூற்றை நாங்கள் ஆதாரத்தை பார்க்கு முன்னரே ஏற்றுக்கொண்டு விட்டோம். அதன்பின் குர்ஆன் ஹதீஸில் எத்தனை ஆதாரங்களை நாங்கள் கண்டாலும் அவற்றில் எங்களின் சுயபுத்தியை செலுத்தாமல் ஒரு இமாமைத் தொடர்ந்தவர்களாகவே நாம் இருப்போம். இனி ஒரு முகல்லித் குர்ஆன் ஹதீஸை பார்க்கவே கூடாதென்று எந்த விதியும் மார்க்கத்தில் கிடையாது.

இன்னும் இதுபோன்றே மார்க்கத்தின் சட்ட திட்டங்களுக்கு சம்பந்தமில்லாதவற்றிலும் யாரையும் பின்தொடர வேண்டுமென்ற அவசியமில்லை.

உதாரணமாக, "யஜீத்" என்பவர் காபிரா இல்லையா? என்பது வரலாற்றுப் பிரச்னை. இது ஈமானுக்குரிய பிரச்னையல்ல. இதில் யஜீதை காபிரென்று சொல்பவரையோ, அல்ல என்று மறுப்பவர்களையோ நாம் பின்பற்றத் தேவையில்லை.

எனவே தக்லீத் செய்வது பற்றிய வகைகள், அது யார்மீது கடமை, தடை மற்றும் முஜ்தஹிதுகள், முஜ்தஹிதல்லாதார் போன்றோர் பற்றி இப்போது பார்ப்போம்.

## முஜ்தஹித் என்பவர் யார்?

குர்ஆனின் வசனங்களில் விபரிக்கப்படும் சைக்கினைகள், அதன் அகக் கருத்துகள் போன்றவற்றை நன்கு விளங்கி சட்டங்கள் அமைத்திடும் அளவிற்கு தகுதியுடையோராகவும், நாஸிக், மன்ஸூக் பற்றிய வசனங்களை அறிந்தவர்களாகவும், நஹ்வு, ஸர்பு, பலாஃகத், பஸாஹத் போன்ற அரபி இலக்கண, இலக்கியக் கலைகளில் மற்றும் அரபியரின் பழக்க வழக்கங்களை தெரிந்தவர்களாகவும், திருமறை மற்றும் ஹதீஸின் மீது நன்கு பாண்டித்தியமுள்ளவர்களாகவும், நுண்ணிய புத்திமானாகவும் நன்நடத்தையுடையவர்களாகவும் இருப்போரே முஜ்தஹிதாவார்.

## ஃகைரெ முஜ்தஹிது என்பவர் யார்?

மேற்கண்ட தகுதியில்லாதோருக்கு ஃகைரெ முஜ்தஹிதுகள் என்று சொல்லப்படும். இவர்களை முகல்லிதுகள் என்றும் சொல்லலாம். முகல்லிதுகள் மீதும், ஃகைரெ முகல்லிதுகள் மீதும் முஜ்தஹிதை தக்லீத் செய்வது கடமையாகும். இனி முஜ்தஹிதுகள் அடுத்தவரை தக்லீத் செய்தல் அறவே கூடாது.

அடுத்து முஜ்தஹிதுகள் ஆறு வகையான படித்தரமுடையோரா யிருக்கின்றனர். அவை வருமாறு:-

### முஜ்தஹிதுன் பிஷ் ஷரஹ்

ஒரு சமூக மக்கள் பின்பற்றிச் சென்று உய்வடையக் கூடிய மார்க்கச் சட்டங்களை வகுத்தளிப்பவர்கள் இவர்கள். உதாரணமாக,

இமாம் அபூ ஹனீபா, இமாம் மாலிக், இமாம் ஷாபி, இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் (ரலியல்லாஹு அன்ஹும்) போன்றோர்.

## முஜ்தஹிதுன் பில் மத்ஹப்

இவர்கள் உஸூல் என்னும் அடிப்படை சட்டங்களில் ஒரு இமாமைப் பின்பற்றுவதுடன், அதன் கிளைகளான உட்பிரிவு சட்டங்களை சுயமாக ஆராய்ந்தெடுக்கும் தகுதியுடையோராவார். உதாரணமாக, ஹனபி மத்ஹபில் இமாம் அபூ யூஸுப், இப்னுல் முபாரக் (ரஹிமஹுமல்லாஹ்) ஷாபி மத்ஹபில் முஸனி, புவைதி (ரஹிமஹுமல்லாஹ்) போன்றோராவர்.

## முஜ்தஹிதுன் பில் மஸாயில்

இவர்கள் அடிப்படை சட்டங்களிலும், உட்பிரிவுகளான கிளைச் சட்டங்களிலும் ஒரு இமாமைப் பின்பற்றுவதுடன், எந்த சட்டங்களில் இமாம்களின் சொற்கள் நேரடியாக காட்டப்படவில்லையோ, அவற்றை குர்ஆன், ஹதீஸின் ஆதாரங்களைக் கொண்டு ஆராய்ந்து சட்டங்களை எடுத்துரைக்கும் ஆற்றலுடையோர். உதாரணமாக, ஹனபி மத்ஹபில் அபூ ஜஃபர் தஹாவி பக்ருத்தீன் காலிகான், ஷம்ஸுல் அயிம்மா ஸர்கஸி, ஷாபி மத்ஹபில் கல்விக்கடல் இமாம் கஜ்ஜாலி ரஹிமஹுமுல்லாஹ் போன்றோராவர்.

## அஸ்ஹாபுத் தக்ரீஜ்

இன்னோர்க்கு இஜ்திஹாத் (ஒரு சட்டத்தை பிரிக்கும் ஆற்றல்) அறவே கிடையாது. எனினும் உஸூலாகிய மார்க்கத்தின் மூலாதாரச் சட்டங்களனைத்தையும் புரிந்து கொண்டிருப்பதால் இமாம்களது மூடலான சொற்கள், சட்டங்கள் போன்றவற்றை விபரமாகத் தெளிவுபடுத்தும் ஆற்றல் உடையவர்கள். உதாரணமாக இவர்களில், ஹனபி மத்ஹபில் இமாம் கர்ஷீ, இமாம் ராஜீ, ஷாபி மத்ஹபில் இமாம் ராபிஈ, இமாம் நவவி ரஹிமஹுமுல்லாஹ் போன்றோராவர்.

## அஸ்ஹாபுத் தர்ஜீஹ்

இன்னோர் இமாம்களின் தரப்பிலிருந்து இருவகை கருத்துகள் வந்திருப்பின், அவற்றில் இரண்டையும் ஆராய்ந்து ஒன்றை மட்டும் விசேஷமானதாயிருப்பதை அறிவிப்பவர்கள். இவ்வாறே இமாம் களது சொற்களுக்கும், அவர்களது சிஷ்யர்களது சொற்களுக்கு மிடையே முரண்பாடு காணப்பட்டால் அதில் எது சரியானதோ, அதைப் பிரித்துக் காண்பிக்கும் ஆற்றலுடையவர்கள். உதாரணமாக இவர்களில், ஹனபி மத்ஹபில் ஸாஹிபுல் குதூரி, ஸாஹிபுல்

ஹிதாயா, ஷாபி மத்ஹபில் இமாம் நவவி, இமாம் ராபிஃ ரஹிமஹுமுல்லாஹ் போன்றோராவர்.

### அஸ்ஹாபுத் தமீஸ்

இன்னோர் மத்ஹபின் வெளிப்படையானவை, அரிதானவை, பலவீனமானவை, ஊர்ஜிதமானவை போன்றவற்றை பிரித்தறிவிப்பவர்கள். மறுக்கப்பட்டவைகளையும், பலவீனமான அறிவிப்புகளையும் களைந்து உண்மையானவற்றையும், ஊர்ஜிதமானவற்றையும் எடுத்துரைப்பவர்கள். இவர்களில் உதாரணமாக, ஹனபி மத்ஹபில் ஸாஹிபுல் கன்ஜு, ஸாஹிபுத் துர்ருல் முக்தார், ஷாபி மத்ஹபில் இப்னு ஹஜர், இமாம் ரமலி ரஹிமஹுமுல்லாஹ் போன்றோராவர்.

இதுவரை மேலே விபரிக்கப்பட்ட ஆறுவகை தன்மைகளும் இல்லாத அனைவரும் ஒரு இமாமை பின்பற்றிச் செல்லும் முகல்லிதுகள் எனப்படுவர். உதாரணமாக, நாமும் இன்று நம்மிடையே வாழ்ந்து கொண்டுள்ள உலமாக்களுமாவர்.

இனி இந்த உலமாக்கள் இமாம்களது சட்டங்களைப் பார்த்து அதிலிருந்து மஸாயில்களை எடுத்துக் கூறுவர். மாறாக சுயமாக எதையும் ஆராய்ந்து சொல்ல இவர்களுக்கு எவ்வித அதிகாரமும் கிடையாது.

இதுபோன்றே மேற்கண்ட ஆறு வகை முஜ்தஹிதுகள் தங்கள் தரத்திலுள்ள எவரையும் தக்லீத் செய்ய மாட்டார்கள். மாறாக இவர்களில் தரத்தில் தாழ்ந்தோர் தம்மைவிட தரத்தில் உயர்ந்து நிற்போரை தக்லீத் செய்வர்.

உதாரணமாக, இமாம் அபூ யூஸுப், இமாம் முஹம்மத் ரஹிமஹுமல்லாஹ் போன்றோர் ஷரீஅத்துடைய உஸுலாகிய அடிப்படை சட்டங்களில் இமாம் அபூஹனீபா ரஹிமஹுல்லாஹ்வை தக்லீத் செய்துள்ளனர். ஆனால் உஸுலல்லாத பிரிவுச் சட்டங்களில் அவர்கள் முஜ்தஹிதுகளேயன்றி ஒரு இமாமைப் பின்பற்றிய முகல்லிதுகள் அல்ல.

நமது இவ்விளக்கத்தின் வாயிலாக இமாம் அபூ யூஸுப், இமாம் முஹம்மத் போன்றோர் (ரஹிமஹுமல்லாஹ்) ஹனபி மத்ஹபுக் காரர்களாயும், ஒரு இமாமைப் பின்பற்றக்கூடிய முகல்லிதுகளாகவும் இருந்த போதிலும் பல்வேறு இடங்களில் இமாம் அபூஹனீபா

ரஹ்மஹுல்லாஹ்வின் கருத்துக்கு மாற்றமாக இவர்கள் ஏன் முரண்படுகின்றனர் என்பதாக இமாம்களை நிராகரிப்போர் கேட்கும் கேள்விக்கு தக்க பதிலும் கிடைத்து விடுகின்றது.

காரணம், இவர்கள் உஸூலாகிய மார்க்கத்தின் மூலாதாரச் சட்டங்களில் தமது இமாமைப் பின்பற்றிய முகல்லிதுகளே! அவற்றில் இவர்கள் மாற்றம் செய்யவோ, தலையிடவோ, தங்களின் அறிவை நுழைக்கவோ மாட்டார்கள். ஆனால் மூலாதாரச் சட்டங்களின் உட்பிரிவுச் சட்டங்களான மஸாயில்களில் தங்களின் அறிவை கொண்டு ஆராய்வார்கள். இதில் தமது இமாமை ஒருபோதும் பின்பற்ற மாட்டார்கள்.

அத்துடன் இமாம்களை நிராகரிப்போர் நம்மை பார்த்து, நீங்கள் அதிகமான மார்க்க சம்பந்தப்பட்ட பிரச்னைகளில் இமாம் அபூ யூஸுபையும், இமாம் முஹம்மதையும் (ரஹ்மஹுமல்லாஹ்) தானே பின்பற்றி அவர்களின் சொற்களை ஆதாரமாக வைத்து தீர்ப்பு வழங்குகின்றீர்கள்? இமாம் அபூஹனீபா ரஹ்மஹுல்லாஹ்வை விட்டு விடுகிறீர்களே! இந்நிலையில் நீங்கள் எவ்வாறு ஹனபி மத்ஹபைச் சார்ந்தவர்களாக முடியும்? என்ற கேள்விக்கும் விடை கிடைத்து விடுகிறது.

இன்னும் இமாம் யூசுப், இமாம் முஹம்மத், இப்னுல் முபாரக் ரஹ்மஹுமுல்லாஹ் போன்றோர் ஆய்ந்தெடுத்துள்ள சட்டங் களனைத்தும் அசலில் இமாம் அபூஹனீபா ரஹ்மஹுல்லாஹ் அவர்கள் வகுத்த அடிப்படை ஆதாரச் சட்டங்கள் மீதே அமைந்திருந் தன. எனவே மேற்கண்ட இமாம்களின் சட்டங்கள் யாவும் எதார்த்தத் தில் இமாம் அபூஹனீபா ரஹ்மஹுல்லாஹ் அவர்களின் சட்டங்கள் தான். இந்நிலையில் ஹனபிகள் இமாம் அபூஹனீபா ரஹ்மஹுல் லாஹ்வை தக்லீத் செய்தவர்கள் தான் என்று கூறுவதில் வியப் பென்ன இருக்கிறது?

இதே அடிப்படையில்தான் இமாம் நவவி, இமாம் ராபிஃ ரஹ்மஹுமல்லாஹ் போன்றோரின் சட்டங்களை ஏற்று நடக்கும் ஷாபிய்யாக்கள் உண்மையில் இமாம் ஷாபி ரஹ்மஹுல்லாஹ்வை தான் தக்லீத் செய்கின்றனர் என்பதை நாம் புரிந்து கொள்ளலாம். மேலும் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர் களுக்கு வழிப்பட்டு அவர்கள் காட்டித் தந்த வழிமுறைப்படி அமல் செய்வது எதார்த்தத்தில் இறைவனின் கட்டளைகளை தன்னகத்தே

கொண்டுள்ள திருமறைப்படி அமல் செய்வதாகும் என்பதையும் நாம் தெரிந்து கொள்ளும் போது அபூஹனீபா ரஹிமஹுல்லாஹ்வின் மூலாதாரச் சட்டங்களுக்கு அவர்களது சீடர்களின் சட்ட அமைப்புகள் வேறானதோ, தனித்தன்மை கொண்டதோ அல்ல என்பதனை நாம் தெரிந்து கொள்கிறோம்.

இனி சில கைரெ முகல்லிதுகளான வஹ்ஹாபிகள் எங்களுக்கும் இஜ்திஹாத் (ஆராய்ச்சி) செய்யும் திறன் இருக்கின்றதாகையால் நாங்கள் எந்த இமாமையும் பின்தொடர வேண்டிய அவசியமில்லையென்பதாகப் புலம்புகின்றனர். இத்தகையோருக்கு நாம் அதிகமாக ஒன்றும் சொல்லத் தேவையில்லை. ஒரேயொரு கேள்வியை மட்டும் நாம் வைக்கிறோம். இஜ்திஹாத் செய்வதற்கு எத்தகைய அறிவுத் தேவை என்ற கேள்வி மட்டுமே போதுமானதென நினைக்கிறோம். இமாம் கஜ்ஜாலி, இமாம் பக்ருத்தீன் ராஜி போன்ற முபஸ்ஸிரீன்கள், இமாம் திர்மிதி, இமாம் அபீதாவூத் போன்ற ஹதீஸ் கலை நிபுணர்கள், ஹஜ்ரத் சையிதினா கௌஸுல் அஃழம், பாயஜீதுல் பிஸ்தாமி, ஷாஹ் பஹாவுல் ஹக் நக்ஷபந்தி போன்ற ஞானவான்கள் அனைவரும் இஸ்லாமிய மக்களிடையே மிகப்பெரும் மேன்மைமிக்கோராக திகழ்ந்தனர் என்பது வெள்ளிடை மலை. அப்படியிருந்தும் கூட இவர்களெல்லாம் முஜ்தஹிதுகளாகி ஒரு புது மத்ஹபை ஸ்தாபிக்காது ஒரு இமாமை தக்லீத் செய்த முகல்லிதுகளாகத்தான் வாழ்ந்து காட்டிச் சென்றனரெனில்,...

இன்று எங்களுக்கும் இஜ்திஹாத் செய்யும் திறமை உள்ளது. எங்களாலும் ஒரு இமாமாக முடியும் என்ற வாதம் ஒரு புறமிருக்கட்டும். முதலில் இந்த ஞானவான்களுக்கு நிகராகவாவது தங்களை இவர்கள் ஒப்புவமை காட்ட முடியுமா? அது மட்டுமா! இந்த ஞானவான்கள் எழுதிக் குவித்துச் சென்ற நூற்களின் பெயர்கள் கூட இக்காலத்திய இந்த வஹ்ஹாபிகளான இமாம்களை நிராகரிப்போர்க்குத் தெரியாத நிலையில் இவர்கள் ஒரு இமாமாக எப்படி முடியும்?

ஒருவர் நம்மிடம் வந்து, நானும் இஜ்திஹாத் செய்ய முடியும். அதற்குரிய ஆற்றலும், கல்வித் திறனும் எனக்கிருக்கிறது என்பதாக வாதிட்டார்.

அதுபற்றி நாம் அவரிடம் அதிகமாக எதுவும் தர்க்கம் செய்ய விருப்பமின்றி, "ஸூரத்துத் தகாஸுரில்" (அல்ஹாக்குமுத்தகாஸுர்) நீர் எத்தனை சட்டங்களை பிரித்தெடுத்தீர்? அப்படிப் பிரித்தெடுத்த

சட்டங்களில், எத்தனை சட்டங்கள் ஹகீகத்தானவை? மஜாஸி யானவை? கினாயா எத்தனை? ளாஹிர் எத்தனை? மன்ஸூகானவை எத்தனை? என்று ஒரேயொரு கேள்வியை மட்டும் கேட்கவும்,...

தர்க்கம் செய்ய வந்தவர் திடுக்குற்றுத் திகைத்துப் போய் மௌனசாமியாக சமைந்து விட்டார். நாம் கேட்ட அந்த அரபிப் பதங்களின் பெயர்களைக்கூட அவர்தம் வாழ்நாளில் கேள்விப்பட்டது கூடக் கிடையாது. (ஸுப்ஹானல்லாஹ்) அவர் எண்ணியது போல் இஜ்திஹாத் என்பது கடைகளில் விற்கும் பொருளல்ல.

**தக்லீத் கடமையே!**

இதனை நாம் இரு பிரிவுகளாக வகுத்துள்ளோம். (1) பொதுவாக தக்லீத் செய்வது பற்றிய ஆதாரங்கள், (2) தனியொரு நபரை தக்லீத் (தக்லீத் ஷக்ஸீ) செய்வது பற்றிய ஆதாரங்கள்.

**முதல்பிரிவு:-** தக்லீத் செய்தல் ஒவ்வொருவர் மீதும் கட்டாய மான கடமை என்பதைப் பற்றி திருமறை வசனங்கள், ஸஹீஹான ஹதீஸ்கள், நல்லோரின் நடைமுறைகள், வேத வியாக்யானிகளது சொற்கள் போன்றவை இதனை உறுதிப்படுத்துகின்றன. பொதுவாக தக்லீத் செய்தல் என்னும் வார்த்தைகள் முஜ்தஹிதீன்களான இமாம் களை தக்லீத் செய்வதையும் குறிக்கும். இப்போது அதற்குரிய ஆதாரங்களைப் பார்ப்போம்.

اهدنا الصراط المستقيم

**எங்களை (செவ்வையான) நேரான பாதையில் நடத்து வாயாக.**

அல்குர்ஆன், ஸூறா-1, வசனம்-5.

صراط الذين انعمت عليهم

**அவ்வழி நீ எவர்கள் மீது உபகாரம் புரிந்தாயோ, அவர் (நபிமார்கள், ஸித்திகீன்கள், ஷுஹதாக்கள், ஸாலிஹீன்) களது வழியாகும்.**

அல்குர்ஆன், ஸூறா-1, வசனம்-6.

இவ்வசனத்தில் குறிப்புக் காட்டப்படும் நேரான பாதை என்பது மேற்கண்ட நன்மக்களனைவரும் நடந்து சென்ற பாதையாகும். அனைத்து வேத வியாக்யானிகளும், ஹதீஸ் கலை வல்லுனர்களும், சட்ட நிபுணர்களும், இறைநேசர்களும், மூர்த்திகளான கௌஸுகளும்,

பிரபஞ்ச முளைகளான குத்புமார்களும், ஏன்? இறைவனின் நல்லருளைப் பெற்ற நல்லோரனை வரும் ஒரு இமாமைப் பின்பற்றி தக்லீத் செய்தவர்களாகவே வாழ்ந்து சென்றிருப்பதால் "தக்லீத்" என்பதுதான் "ஸிராத்தல் முஸ்தகீம்" என்னும் நேரான வழியாகும்.

لايكلف الله نفسا الا وسعها

**(2) எந்த ஒரு ஆன்மாவுக்கும் அதன் சக்திக்கு ஏற்பவே யன்றி இறைவன் கஷ்டம் கொடுக்க மாட்டான்.**

அல்குர்ஆன், ஸூறா-2, வசனம்-286.

சக்திக்கு மீறிய சுமைகளை இறைவன் யார்மீதும் சுமத்தவில்லை என்று மேற்கண்ட வசனம் விளக்கம் தரும்போது, இஜ்திஹாத் செய்யவும், குர்ஆன் ஹதீஸிலிருந்து மார்க்கச் சட்டங்களை கிரகித்தெடுக்கவும் சக்தியற்ற நிலையிலுள்ளவர்கள் ஒரு இமாமை தக்லீத் செய்யக் கூடாது. மாறாக தாமே சுயமாக தமக்குரிய சட்டங் களை குர்ஆன் ஹதீஸிலிருந்து கிரகித் தெடுத்துக் கொள்ள வேண்டு மென்று கூறப்பட்டால் இவை தகுதியற் றோரின் சக்திக்கு அப்பாற் பட்ட கஷ்டத்தை கொடுப்பதாகாதா என்ன? அன்றி ஏழைக்கு ஜக்காத் தும், ஹஜ்ஜும் கடமையானவையல்ல என்பதாக விடுதல் தரப் பட்டுள்ள போது, அறிவுத் திறனற்றவர் மார்க்கச் சட்டங்களை தாமே இயற்றிக் கொள்ள வேண்டுமெனக் கூறுதல் எப்படிச் சரியாகும்?

والسابقون الاولون من المهاجرين والانصار الذين
اتبعوهم باحسان رضي الله عنهم ورضوا عنه

**(3) முஹாஜிரீன்கள், அன்ஸாரிகளில் நின்றும் முந்திய வர்களையும் இன்னும் அவர்களை நன்மையைக் கொண்டு பின் தொடர்ந்தவர்களையும் இறைவன் பொருந்திக் கொண் டான். அவர்களும் இறைவனைப் பொருந்திக் கொண்டார்கள்.**

அல்குர்ஆன், ஸூறா-9, வசனம்-101.

மக்காவாசிகளான முஹாஜிரீன்களையும், மதீனாவாசிகளான அன்ஸாரிகளையும் பின்பற்றிச் செல்வதில் இறைவனின் திருப்தி இருக்கின்றதென்பதை இவ்வசனத்தின் மூலம் நாம் தெரிந்து கொள் கிறோம். இதுவும் தக்லீத் தான்.

اطيعوا الله واطيعوا الرسول واولى الامر منكم

(4) இறைவனுக்கு வழிப்படுங்கள். இன்னும் (அவனது) தூதருக்கும் வழிப்படுங்கள். இன்னும் உங்களின் காரிய கர்த்தர்களுக்கும் வழிப்படுங்கள்.

அல்குர்ஆன், ஸூறா-4, வசனம்-58.

இவ்வசனத்தில் இறைவன், அவனது தூதர், இன்னும் காரிய கர்த்தர் என்னும் சட்டக்கலை வல்லுனர்களுக்கும் வழிப்பட்டு நடக்க வேண்டுமென கட்டளை பிறப்பிக்கப்படுகிறது.

இன்னும் இவ்வசனத்தில் இறைவனுக்கு வழிப்படுங்கள். இன்னும் அவனது தூதருக்கும், உங்களின் காரியகர்த்தருக்கும் வழிப்படுங்கள் என்பதில் அரபிப் பதமான "அதீவு" என்பதை இருமுறை பிரயோகிக்கப்பட்டுள்ளது.

காரணம், இறைவனுக்கு வழிப்படுதல் என்பது அவனது சொல், கட்டளை போன்றவற்றில் மட்டுந்தான். மாறாக செயலிலும் மௌனத்திலுமல்ல. ஏனெனில் இறைவன் அவனை நிராகரிக்கும் காபிர்களுக்கு இரணமளிக்கிறான். வெளிரங்கத்தில் வெற்றியை தருகிறான். இருந்தும் காபிர்கள் தமது குப்ரின் மீதே தான் இருந்து வருகின்றனர். அதற்காக அவர்களை இறைவன் உடனே தண்டிப்பது மில்லை. இதில் நாமும் இறைவனைப் பின்பற்றி காபிர்களுக்கு உதவி செய்ய முடியாது.

இதுபோன்றே அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லமவர்களுக்கும், அவர்களின் காரியகர்த்தர் (இமாம்) களுக்கும் வழிப்படுதல் என்பதன் கருத்து. அவர்களின் சொல் அல்லது செயல் போன்ற ஏதாவதொன்று அவர்கள் முன்னிலையில் நடைபெற்று அதனை அவர்கள் பார்த்து மௌனமாக இருந்தால் அம்மௌனமாகிய மூன்று நிலைகளையும் நாம் பின்பற்றிட வேண்டும்.

இந்தப் பாகுபாட்டினை விளக்க வேண்டித்தான் இவ்வசனத்தில் "அதீவு" என்னும் பதத்தை இருமுறை பிரித்துக் காட்டப்பட்டுள்ளது.

அடுத்து உங்களின் காரியகர்த்தர்களுக்கும் என்று சொல்லப் பட்டிருப்பதில் "காரியகர்த்தர்" என்பதன் கருத்தானது இஸ்லாமிய மன்னர்கள் தான். இமாம்களான சட்டக்கலை வல்லுனர்களல்ல என்று கூறப்படுகின்றது.

எனினும் இஸ்லாமிய மன்னர்களுக்கு வழிப்படுதல் மார்க்கத்திற்கு

இசைவான விஷயங்களில் மட்டுந்தான். மாற்றமானவைகளில் அல்ல.

இனி மன்னர்கள் மார்க்கத்திற்கு இசைவானவை எவை? மாற்ற மானவை எவை? இதுபற்றிய மார்க்கச் சட்டமென்ன? என்பன போன்றவையனைத்தையும் முஜ்தஹிதீன்களென்னும் இமாம்களான சட்டக்கலை வல்லுனர்களிடம் கேட்டுத்தான் தெரிந்துகொள்ள முடியும். அவ்வாறில்லையெனில், இமாம்கள் மட்டுமே மக்களை ஆளுகின்ற மன்னராக வரவேண்டுமென இஸ்லாம் சட்டம் வகுத்திருக்கும். ஆனால் இது மனித நீதியாகாது. எனவே சட்ட திட்டங்களை இமாம் இயற்ற மன்னர் அதனை செயல்படுத்துகிறார். ஆகையால் மன்னர் மக்களை ஆளும் அதிகாரி. இமாம் மன்னருக்கு அதிகாரி.

அவ்வாறாயின் இங்கு மன்னருக்கு வழிப்படுதல் என்பது உண்மையில் இமாமுக்குத்தான் என்பதை நாம் தெரிந்து கொள்வதால் "உங்களின் காரியகர்த்தர்" என்பதற்கு மன்னரென்று சொல்லப்பட் டாலும் அங்கே மன்னரில் இமாமின் வெளிப்பாடே நிகழ்கின்றதென் பதை நாம் புரிந்து கொள்கிறோம்.

**ஒரு நுட்பம்:-**

திருமறையில் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ள சட்டங்களில் உதாரணமாக, கணவனை இழந்து விட்ட கைம்பெண் நான்கு மாதமும் பத்து நாட்கள் வரை இத்தா (தனித்து) இருக்க வேண்டும். இதனை மேற் கண்ட வசனத்தில் "இறைவனுக்கு வழிப்படுங்கள்" என்னும் கட்டளையை சொல்லலாம்.

அடுத்து தங்க ஆபரணங்களை உபயோகித்தல் ஆண்கள் மீது விலக்கப் (ஹராமாக்கப்) பட்டுள்ளது. இதற்கு "உங்களின் ரஸூலுக்கும் வழிப்படுங்கள்" என்னும் கட்டளையை சொல்லலாம்.

மூன்றாவதாக திருமறை மற்றும் திருநபியின் ஹதீஸில் தெளிவாகக் காண முடியாத ஓர் சட்டமாகிய "மனைவியை அவளது பின்பகுதியில் (துவாரம்) புணர்தல் ஹராம். இதற்கு "உங்களின் காரியகர்த்தர்களுக்கு வழிப்படுங்கள்" என்னும் கட்டளையை சொல்லலாம்.

فاسئلوا اهل الذكر ان كنتم لاتعلمون

**நீங்கள் அறியாதவர்களாயிருந்தால் அறிவுடை யோ ரிடம் கேட்டுக் கொள்ளுங்கள்.** அல்குர்ஆன், 21 : 7.

மனித வாழ்வில் ஒருவருக்கு ஏற்படும் பிரச்னைகளுக்கு தீர்வு தெரியாது போகும்போது, அதுபற்றிய சட்டத்தை தெரிந்தவர்களிடம் கேட்டுத் தெரிந்து நடக்க வேண்டுமென இவ்வசனம் நமக்கு அறிவுறுத்துகிறது. அவ்வாறாயின் திருமறை மற்றும் நபிமொழியிலிருந்து ஒரு சட்டத்தை பிரித்தெடுக்கும் ஆற்றல் இல்லாதவர்கள் அத்திறனுடையோரிடம் கேட்டுத் தெரிந்து நடப்பது தானே நியதி.

ஆனால் இவ்வசனத்தில் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமெனக் கூறப்பட்டது சரித்திரச் சம்பந்தமான வரலாறுகளைத்தானேயன்றி மார்க்கச் சட்டங்களல்ல என்று சிலர் கூறுவதோடு, அதற்கு ஆதாரமாக இவ்வசனத்திற்கு மேலுள்ள முந்திய வசனங்கள் சரித்திரச் சம்பவங்களைக் குறித்து பேசி வருவதை சுட்டிக் காட்டுகின்றனர். எனினும் இவ்வசனம் எத்தகைய குறிப்பையும் சுட்டிக்காட்டாது பொதுநிலையைப் பற்றியே விபரிப்பதால் நமக்கு எது தெரியவில்லையோ, அதை தெரிந்தவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்வது நம்மீது கடமையென்பதை சுட்டிக் காட்டுகிறதென்று தான் சொல்ல வேண்டும்.

واتبع سبيل من اناب اليَ

**(6) என்னளவில் மீண்டவர்கள் பாதையை பின்பற்றுவீராக.** அல்குர்ஆன், ஸூறா-31, வசனம்-15.

இறைவனளவில் சென்று சேர்ந்த நல்லோர்களான இறையன்பர்களின் வழியைப் பின்பற்றி அவர்களை தக்லீத் செய்ய வேண்டுமென்பது இவ்வசனத்தின் கருத்து. இவ்வசனம் பொது நிலையிலேயே பேசுகின்றது.

والذين يقولون ربنا هب لنا من ازواجنا وذرياتنا قرة اعين واجعلنا للمتقين اماما

**(7) பயபக்தியாளர்கள் (பின்பற்றுகிற) இமாம்களாக எங்களை ஆக்குவாயாக.** அல்குர்ஆன், ஸூறா-125, வசனம்-74.

فنقتدي بالمتقين ويقتدي بنا المتقون

எங்களை முத்தகீன்களான பயபக்தியாளர்களை பின் தொடர்பவர்களாக ஆக்குவாயாக என்னும் விளக்கத்தை தப்ஸீர் "மஆலிமுத் தன்ஜீல்" என்னும் கிரந்தம் கூறுகின்றது. அன்றி அனைவரும் இறையன்

பர்களது அடிச்சுவட்டை பின்பற்றிச் செல்பவர்களாய் இருக்க வேண்டு மென்பதையும் இவ்வசனம் நமக்கு உணர்த்திக் காண்பிக்கிறது.

فلولا نفر من كل فرقة طائفة ليتفقهوا فى الدين
ولينذروا قومهم اذا رجعوا اليهم لعلهم يحذرون

**(8) ஒவ்வொரு கோத்திரத்தாரிலிருந்தும் ஒரு வகுப்பினர் (மட்டும் யுத்தத்திற்கு) புறப்பட வேண்டாமா? (மார்க்கச் சட்டங்களை பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம்) கற்றுக் கொள்ள (மற்றவர்கள் தங்கியிருக்க வேண்டாமா? யுத்தத்திற்குச் சென்றவர்கள்) இவர்கள் பக்கம் திரும்பினால் (கற்றவைகளை அவர்களுக்கு எடுத்துரைத்து) எச்சரிக்கவும் இறைவனின் தண்டனையைத் தவிர்த்தும் கொள்வார்கள்.**

*அல்குர்ஆன், ஸூறா-9, வசனம்-423.*

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் யுத்தத்திற்குச் செல்லாதிருக்கும் சந்தர்ப்பங்களில் நபியவர்களால் குறிக்கப்பட்டவர்கள் மட்டுமே யுத்த களத்திற்குச் செல்ல வேண்டு மென்றும், மற்றவர்கள் தங்கியிருந்து கல்வி கற்றுக் கொள்ள வேண்டு மென்றும் இவ்வசனம் அறிவிப்பதுடன், எல்லோரும் ஒட்டுமொத்த மாக போர்க்களத்திற்கு செல்வதோ, அல்லது அனைவரும் கல்வி கற்பதில் தங்கி விடுவதோ கூடாதென்றும் அறிவிக்கின்றது. அத்துடன் சிலர் கல்வி கற்பதிலும், மற்ற சிலர் உலகியல் சம்பந்தமான பிரச்னை களில் பங்கு பெற்ற வேண்டும். அத்துடன் யுத்தத்திற்கு சென்றவர்கள் தங்கியிருந்து கல்வி கற்போரை தக்லீத் செய்ய வேண்டுமென்றும் இவ்வசனம் சைக்கினை செய்கின்றது.

ولو ردوه الى الرسول والى اولى الامر
منهم لعلمه الذين يستنبطونه منهم

**அதே (போர்க்களச் செய்திகள் அண்ணல் நபி) அவர்கள் பக்கமும், காரியகர்த்தர்களின் பக்கமும் திரும்பினால் அவர்களில் கிரகித்தெடுப்பவர்கள் அதை (உண்மையா? பொய்யா? என்று) விளங்கிக் கொள்வார்கள்.**

*அல்குர்ஆன், ஸூறா-4, வசனம்-82.*

நாம் திருமறை மற்றும் ஹதீஸிலிருந்து ஒரு விஷயத்தை கிரகித்து பிரித்தெடுக்கும் போது, இமாம்கள் அதைப்பற்றி என்ன கூறுகின்றனர் என்று அவர்களின் கருத்தைத்தான் முதன்மையாக்க வேண்டும். அவர்கள் எப்படிச் சொல்கின்றனரோ, அப்படித்தான் நாம் செயல்பட வேண்டும் என்பதை இவ்வசனம் மிகப்பகிரங்கமாக தெளிவுபடுத்துவதை நாம் புரிந்து கொள்ளலாம்.

யுத்தகளம் சம்பந்தமான விஷயங்களையே ஆராய்ந்து கிரகித்தெடுப்போரிடம் தான் சொல்ல வேண்டுமென இவ்வசனம் நமக்கு அறிவுறுத்தும் போது திருமறை வசனங்களும், நபிமொழியும் இதைவிட மிகப் பெரிய விஷயங்களல்லவா! ஆதலால் இதனை இமாம்களின் கூற்றைக் கொண்டு தான் சொல்ல வேண்டும்.

يوم ندعوا كل اناس بامامهم

**(10) ஒவ்வொரு மனிதனையும் நாம் அவர்களது இமாம்களுடனேயே அழைப்போம்.**

அல்குர்ஆன், ஸூறா-17, வசனம்-71.

இவ்வசனத்தில் குறிக்கப்படும் "இமாம்" என்ற பதத்திற்கு நபிமார்கள், வேதங்கள் என்று பல்வேறு வகை கருத்துக்களை வேத வியாக்யானிகள் கூறுகின்றனர்.

இனி யார் யார் எந்தெந்த மத்ஹபின்படி அமல் செய்து வாழ்ந் தார்களோ, அவர்கள் ஒவ்வொருவரும் அந்தந்த மத்ஹபுக்குரியவர் களுடன் இணைக்கப்பட்டு, ஹனபிகளே! ஷாபிகளே! மாலிக்கிகளே! ஹன்பலிகளே! என்று அழைக்கப்படுவார்கள் என்ற விளக்கமும் இமாம் என்னும் பதத்திற்கு கூறப்படுகின்றது.

(பார்க்க:- தப்ஸீர் ரூஹுல் பயான், தப்ஸீர் ஸாவி)

அன்றி இமாம்களை ஏற்று பின்பற்றாதவர்கள் ஷைத்தா னுடன் இணைந்து அழைக்கப்படுவார்களென்பதாக கண்ணியமிகும் ஞானவான்கள் கூறியுள்ளனர்.

واذا قيل لهم أمنوا كما أمن الناس قالوا
أنؤمن كما أمن السفهاء

**(11) (நன்) மக்கள் ஈமான் கொண்டது போல் நீங்களும் ஈமான் கொள்ளுங்கள் என்று (முனாபிக்கீன்களுக்கு) சொல்**

லப்பட்டால் அறிவீனர்கள் ஈமான் கொண்டது போல் நாங்களும் ஈமான் கொள்வோமா? என்று (அம்முனாபிக்கீன்கள்) சொல்வார்கள். அல்குர்ஆன், ஸூறா-2, வசனம்-18.

ஸாலிஹீன்களான நல்லோர்களது விசுவாசம் போலுள்ள ஈமானுக்குத் தான் இறைவனிடம் மதிப்புண்டு என்றிருக்கும்போது அந்நல்லோர்கள் ஏற்று நடந்த மத்ஹபுகள் தான் நல்ல வழியாகும். அதுதான் இமாம்களை தக்லீத் செய்து வாழும் நம் வழியாகும்.

## வேத வியாக்யானிகள், ஹதீஸ் கலை வல்லுனர்களின் ஆதாரங்கள்

اخبرنا يعلى قال اخبرنا عبدالملك عن عطاء واطيعوا الله واطيعوا الرسول واولى الامر منكم قالوا اولوا العلم والفقه

இறைவனுக்கு வழிப்படுங்கள். இன்னும் ரஸூலுக்கு வழிப்படுங்கள். இன்னும் உங்களின் காரியகர்த்தர்களுக்கும் வழிப்படுங்கள். அல்குர்ஆன், ஸூறா-4, வசனம்-58.

இவ்வசனத்தில் "காரியகர்த்தர்" என்பதன் கருத்து "மார்க்கக் கல்வியுடையவர்" என்பதாகும்.
(அ-ர். அதாவு ரலியல்லாஹு அன்ஹு, நூல்-தாரமி)

فاسئلوا اهل الذكر ان كنتم لاتعلمون ، فاسئلوا المؤمنين العالمين من اهل القرأن

நீங்கள் அறியாதவர்களாயிருப்பின், அறிவுடையோரிடம் கேட்டறிந்து கொள்ளுங்கள். அல்குர்ஆன்.

(فاسئلوا اهل الذكر) اخرج ابن مردويه عن انس قال سمعت النبي صلى الله عليه وسلم يقول ان الرجل يصلي ويصوم ويحج ويغرو وانه لمنافق قالوا يا رسول الله بما ذا دخل عليه النفاق قال لطعنه على امامه وامامه من قال قال الله في كتابه فاسئلوا اهل الذكر ان كنتم لاتعلمون

ஒருவன் தொழுகின்றான், நோன்பு நோற்கிறான், ஹஜ்ஜுடன் இறைவழியில் ஜிஹாதும் செய்கிறான். அப்படியும் அவன் முனாபிக்காக இருக்கிறானென்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூற, அவனுக்குள் முனாபிக்குத் தன்மை எவ்வாறு புகுந்ததென்று நபித் தோழர்கள் கேட்கவும்,... அவன் தனது இமாமை குறை கண்டதால் என்று நபிகளார் பதில் தந்தனர். அதற்கு தோழர் பெருமக்கள் அவனது இமாம் யார்? என்று மீண்டும் வினவிட,... இறைவன் தனது மாமறையில் "பஸ்அலூ அஹ்லத் திக்ரி" என்று கூறியுள்ளானே அவர்கள் என்பதாக நபிகளார் நவின்றனர்.

*அ-ர். அனஸ் ரலியல்லாஹு அன்ஹு, நூல் : துர்ருல் மன்தூர்.*

*பின்னும் அறிவுடையோர் என்பதன் கருத்தானது, திருமறை மற்றும் ஹதீஸை நன்கு ஆய்ந்து தெளிவுபடுத்திய இமாம்களாகும். அவர்களையே நாம் பின்பற்ற வேண்டுமென்பது வெள்ளிடைமலை.*

(واذكر ربك اذا نسيت) ولايجوز تقليد ما علم المذاهب
الاربعة ولو وافق قول الصحابة والحديث الصحيح
والآية فالخارج عن المذاهب الاربعة ضال مضل وربما
اداه ذالك للكفر لان الاخذ بظواهر الكتاب والسنة من
اصول الكفر

இனி ஒருவர் சொல்லக்கூடிய கருத்தொன்று நபித் தோழர்களின் கருத்துக்கோ, ஸஹீஹான ஹதீஸுக்கோ, திருமறை வசனத்திற்கோ முற்ற முழுக்க ஒத்திருந்தாலும் கூட நான்கு இமாம்களின் சொல்லை தவிர மற்றவர் கூறும் அக்கருத்தை பின்பற்றக் கூடாது. காரணம் நான்கு மத்ஹபு களையும் விட்டு வெளியேறிச் சென்று தன் சொந்தக் கருத்தை சொல்பவன் வழிகெட்டவனாவான். வழி கெடுப்போன் சிலபோது குப்ரென்னும் இறை நிராகரிப்புக்குச் சமீபித்தும் விடுவான். இன்னும் குர்ஆன் ஹதீஸ்களின் வெளிக் கருத்தை மட்டும் எடுத்துக் கொள்வதானது இறைநிராகரிப்

பான குப்ருக்கு ஆணிவேராகும்.

*பார்க்க : தப்ஸீர் சாவி, பாகம்-3, பக்கம்-9.*

(ان الدين النصيحة) عن تميم الدارى ان النبي صلى الله عليه وسلم قال الدين النصيحة قلنا لمن قال لله ولكتابه ولرسوله ولائمة المسلمين وعامتهم

தீன் (மார்க்கம்) என்பது நன்மையை நாடுவதாகும் என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூற, யாருக்கு நாடுவது என்று நாங்கள் கேட்டோம். அதற்கு நபிகளார் இறைவனுக்கும், அவனது வேதத்திற்கும், அவன் தூதருக்கும், முஸ்லிம்களின் இமாம்களுக்கும், முஸ்லிம்களான பொதுமக்களுக்குமென்று நபிகளார் நவின்றனர்.

*அ-ர். தமீமுத்தாரி ரலியல்லாஹு அன்ஹு, நூல் : முஸ்லிம், பாகம்-1, பக்கம்-54.*

وقد يتناول ذالك على الائمة الذين هم علماء الدين وان من نصيحتهم قبول ما رووه وتقليدهم فى الاحكام واحسان للظن بهم

இந்த ஹதீஸில் "முஸ்லிம்களின் இமாம்கள்" என்பதன் கருத்து மார்க்கப் பேரறிஞர்களான இமாம்களாகும். அவர்களுக்கு நன்மையை நாடுவதன் கருத்தானது அவர்கள் சொன்ன கருத்துக்களை ஏற்பதும், அவர்கள் வகுத்துள்ள சட்ட திட்டங்கள் மீது நல்லெண்ணம் வைப்பதுமாகும் என்று அல்லாமா நவவி ரஹிம ஹுல்லாஹ் விளக்கம் தருகின்றனர்.

*ஆதாரம் : ஷரஹு முஸ்லிம்.*

## இரண்டாம் பிரிவு :-

## தனி நபரை பின்பற்றுதல்.....

من اتاكم وامركم جميع على رجل واحد يريد ان يشق عصاكم ويفرق جماعتكم فاقتلوه

நீங்கள் ஒருவரின் கீழ் ஐக்கியமாக ஒருங்கிணைந்து நிற்கும் போது உங்களின் ஐக்கியத்தை உடைத்தெறிவதற்காக ஒருவன் உங்களிடம் வந்தால் அவனை விழ்த்தி விடுங்கள் என்பதாக நபிகள் நாயகம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நவின்றுள்ளனர்.

ஆதாரம் : மிஷ்காத், பக்கம்-320.

இமாம்களான மார்க்க அறிஞர் பெருமக்களை தக்லீத் செய்து பின்பற்றி வாழ்வதையும், இஸ்லாமியச் சட்ட அமைப்புகளுக்கு முரண்பாடற்ற விஷயங்களில் நாட்டின் தலைவர்களை பின் தொடர்ந்து ஐக்கியத்துடன் வாழ வேண்டுமென்பதையும் இந்த ஹதீஸ் நமக்கு அறிவுறுத்துகின்றது. அத்துடன் இமாம் முஸ்லிம் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் தமது ஸஹீஹ் முஸ்லிம் என்னும் நூலில் குற்றமற்ற விஷயங்களில் தலைவர்களுக்கு வழிப்படுதல் வாஜிபு (அவசியம்) என்பது பற்றி தலைப்பிட்டு ஒரு பாடத்தையே அமைத்திருக்கின்றனர்.

இப்பண்டிதர் (ஹஜ்ரத் இப்னு மஸ்வூத் ரலியல்லாஹு அன்ஹு) உங்கள் மத்தியிலிருக்கும் போது لاتسئلوا الى ما دام هذا الحبر فيكم என்னிடம் எதையும் கேட்காதீர்கள் என்பதாக ஹஜ்ரத் அபூ மூஸா அஷ்அரி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் இப்னு மஸ்வூத் ரலியல்லாஹு அன்ஹுவைப் பற்றி சொன்னார்கள்.

ஆதாரம் : மிஷ்காத், பக்கம்-264.

சிறப்புற்றவர் இருக்கும்போது மற்றவரை (தக்லீத்) பின்பற்றக் கூடாதென்றும், ஒவ்வொரு முகல்லிது (பின்பற்றுவோரு) ம் தங்களின் இமாமே மேலானவர் என்னும் சிந்தையை இருத்திக் கொள்ள வேண்டுமெனவும் இந்த ஹதீஸ் அறிவுறுத்துகின்றது.

من تولى امر المسلمين شيئا فاستعمل عليهم رجلا ويعلم ان فيهم من هو اولى بذالك واعلم منه بكتاب الله وسنة رسوله فقد خان الله ورسوله وجماعة المسلمين

இன்னும் இஸ்லாமிய மக்களின் பொதுப்பணிக்குத் தலைவனாயிருப்பவன் (மக்களால் தலைவனாக நியமிக்கப்பட்டவன்) தன் பணியை செயல்படுத்த அதிகாரியொருவர்

தேவைப்பட்டு அப்பணிக்கு குர்ஆன் ஹதீஸை நன்கு தெரிந்தவர் இருக்கும்போது அதைவிட தகுதி குறைந்த ஒரு வரை நியமனம் செய்தால் அத்தலைவன் இறைவனுக்கும், இறைத்தூதருக்கும், பொது ஜன சமூகத்திற்கும் மோசம் செய்து விட்டான். *ஆதாரம் : பத்ஹுல் கதீர்.*

من مات وليس في عنقه بيعة مات ميتة جاهلية

**எவன் தனது கருத்தில் (இமாமுக்குக் கட்டுப்பட்டு நடக்கும்) பைஅத் - உடன்பாடின்றி மரணமடைகின்றானோ, அவன்; அஞ்ஞான காலத்தில் செத்த மாதிரி சாவான்.**

*ஆதாரம் : மிஷ்காத், அ-ர் : முஸ்லிம்.*

இந்த ஹதீஸ் இமாம்களை ஏற்று தக்லீத் செய்யும் பைஅத்தையும், ஞானவான்களான ஷைகுமார்களின் பைஅத்தையும் விளக்கிக் காட்டுகின்றது. இனி இந்த ஹதீஸின் விளக்கம் இதுவல்ல என்று கூறப்பட்டால் இந்திய நாட்டில் வஹ்ஹாபிகள் (நஜாஸத்) எந்த இமாமிடம் இந்த ஹதீஸின் பிரகாரம் பைஅத்துச் செய்வார்கள்? இதுவரை நாம் திருமறை மற்றும் நபிமொழியிலிருந்து ஒருசிலவற்றை மட்டுமே இங்கு எடுத்துக்காட்டியுள்ளோம். இன்னும் எத்தனையோ எண்ணற்ற ஆதாரங்கள் மலிந்து கிடந்தாலும் விரிவஞ்சி விடுகிறோம்.

தபவுத்தாபியீன்களான நபித்தோழர்களுக்கடுத்த, அவர்களுக்குப் பின் வந்தவர்களை அடுத்துப் பின்வந்தவர்களான இந்நல்லோரின் காலந்தொட்டு இன்றுவரை நம்மிடையே வாழ்ந்து வரும் இஸ்லாமிய மக்களைப் பாருங்கள். இஜ்திஹாதென்னும் திருமறை நபிமொழியை ஆய்வு செய்யும் தகுதியற்றோர் தகுதி வாய்ந்த முஜ்தஹிதுகளை தக்லீத் செய்தே வாழ்ந்து வந்துள்ளனர். இதுதான் சமுதாயத்தின் ஏகோபித்த ஏற்றுக் கொண்ட முடிவாகும். இந்த முடிவுக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டுமென்பது திருமறை மற்றும் நபிமொழி நமக்குக் கற்றுத்தரும் வழிமுறையாதலால் இது அவசியமான ஒன்றாகும்.

ومن يشاقق الرسول من بعد ما تبين له الهدى
ويتبع غير سبيل المؤمنين نوله ما تولى ونصله
جهنم وسائت مصيرا .

**நேர்வழி தெளிவான பின்பும் யார் ரஸூலுக்கு (அவர் கள் கொண்டு வந்தவைகளில்) மாறுபுரிந்து விசுவாசிகளது வழியல்லாத மாற்று வழியைப் பின்பற்றுகின்றார்களோ, அவர்களை நாம் (தேர்ந்தெடுத்துக் கொண்ட வழியில்) அதிகாரிகளாக்குவோம். (பின்னர் மறுமையில்) அவர்களை நரகில் புகுத்துவோம்.** *அல்குர்ஆன், ஸூறா-4, வசனம்-14.*

اتبعوا السواد الاعظم فانه من شذ شذ فى النار

**இஸ்லாமிய மக்கள் எந்த வழியைத் தேர்ந்தெடுத்துள் ளார்களோ, அவ்வழியை நாமும் தேர்ந்தெடுத்துக் கொள் ளல் பர்ளு (கட்டாயக் கடமை) என்பதை இவ்வசனம் நமக்கு உணர்த்துகின்றது. இதில் இஸ்லாமிய மக்கள் தேர்ந்தெடுத்த வழிதான் பொதுமக்களாகிய ஜமாஅத்தை தொடர்ந்து செல்வதாகும். எவன் தனிமையாகிறானோ அவன் நரகத் திலும் தனியாக்கப்படுவான்.** *ஆதாரம் : மிஷ்காத்.*

ما رآه المؤمنون حسنا فهو عند الله حسن

**விசுவாசிகளான முஃமின்கள் எதை நல்லதெனக் கருது கின்றனரோ, அது அல்லாஹ்விடமும் நல்லது தான்.**

*-அல்ஹதீஸ்.*

*காலங்காலமாக அன்றிலிருந்து இன்றுவரை உலக முஸ்லிம் களும், அரபியரும் தனிநபரை-இமாமை பின் தொடர்ந்தே வந்து கொண்டுள்ளனர்.*

*எவன் "தக்லீத்" செய்யவில்லையோ, அவன்; உலக நியதியான கட்டுக்கோப்பை - ஐக்கியத்தை உடைத்த பாவியாவான். இப்படிப் பட்டவன் முதலாம் கலிபா அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹுவின் மற்றும் இரண்டாம் கலீபா உமர் ரலியல்லாஹு அன்ஹுவின் ஆட்சியை எவ்வாறு ஏற்றுக் கொள்வான்? இவர்களின் ஆட்சிப் பொறுப்பு மக்களால் ஏகோபித்து உருவாக்கப்பட்டதல்லவா! இதை மறுப்பவன் காபிராகி விடுவான். இது போன்றது தான் இமாம்களை தொடருகின்ற தக்லீதுமாகும்.* *ஆதாரம் : ஷாமி.*

*முஹாஜிரீன்களான மக்காவாசிகளைக் குறித்து திருமறை "உலாயிக ஹுமுஸ்ஸாதிகீன்" என்றும், "வகூனூ மஅஸ்ஸாதிகீன்"*

என்றும் கூறுகின்றது. ஆதலால் அன்ஸாரிகளாகிய மதீனாவாசிகளே! நீங்கள் எங்களுடன் இணைந்து எங்களுக்கு ஒத்துழைப்புத் தாருங்கள். உங்களுக்கென தனியொரு ஆட்சியை அமைக்க வேண்டாமென முதல் கலீபா அபூபக்கர் ஸித்தீக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது ஆட்சிப்பொறுப்பை ஏற்கும்போது கூறினர். ஆதாரம் : தப்ஸீர் காஜின்

எனவே இறை நேசர்களனைவரும் தக்லீத் செய்துள்ளனராகையால் கைறெ முகல்லிதீன்களான இமாமை பின்பற்றாதவர்களே! நீங்கள் இனியும் காலந்தாழ்த்தாது இறைநேசத்துடன் இணைந்து தக்லீத் செய்ய முன்வாருங் களென அறிவுரை தருகிறோம். வாரீர்.

## தக்லீத் பற்றி (யுக்தி) அறிவார்த்தமான ஆதாரங்கள்

உலகியலில் ஒவ்வொருவரும் மற்றவரை பின்பற்றிச் செல்லாமல் வாழவே முடியாது. ஒவ்வொரு தொழிலாளியும் அத்தொழிலின் வல்லுனரை பின்பற்றியே செயலாற்றுகின்றனர். இதில் மார்க்கவியல் உலகியலை விட மிகச் சிக்கலானது. இதில் கண்டிப்பாக மார்க்க விற்பன்னர்களை பின் தொடர்ந்தேயாக வேண்டும். இந்தப் பின்தொடர்தல் என்னும் தக்லீத் முறை ஹதீஸ் கலையிலும் இருக்கின்றது.

உதாரணமாக, ஒரு ஹதீஸை அறிவிக்கின்ற ராவி (அறிவிப்பாளர்) ளயீஃபானவர் (பலவீனமானவர்) என்று சொல்லப்பட்டால் அவர் அறிவிக்கின்ற ஹதீஸையும் ளயீஃப் பலவீனமானதென்று நாம் சொல்கிறோம். இவர் பலவீனமானவர் என்பதை நாம் பார்க்கவில்லை. மாறாக இமாம் புகாரி அவர்களை இவ்விஷயத்தில் நாம் தக்லீத் செய்கிறோம்.

இதேபோன்று குர்ஆனை நாம் ஓதும்போது அதனை இன்ன காரி இவ்வகையாக ஓதினார் என்று சொன்னால் அதிலும் நாம் தக்லீத் செய்கிறோம்.

இவ்வாறே திருமறை வசனத்துக்கு ஜபர், ஜேர், பேஷ் போன்ற குறியீடுகளை வைப்பதிலும், வசனங்களை எண்ணுவதிலும் நாம் தக்லீத் செய்கிறோம். அதுமட்டுமா! தொழுகை கூட்டாக நடைபெறும் சமயங்களில் மஃமூம்கள் (பின் நின்று தொழுவோர்) இமாமை தக்லீத் செய்கின்றனர். பின்னும் இஸ்லாமியரது ஆட்சியில் முஸ்லிம்கள்

ஆட்சித் தலைவனை தக்லீத் செய்கின்றனர். ரயிலில் பிரயாணம் செய்யும்போது பிரயாணிகள் இன்ஜின் டிரைவரை தக்லீத் செய்கின்றனர். சுருங்கச் சொன்னால் ஒவ்வொருவரும் முகல்லிதுகளான பின்பற்றுவோராகவே இருக்கின்றனர்.

பின்னும் இங்கு எடுத்துக் காட்டப்பட்டவையனைத்திலும் தொழுகை உட்பட இமாம் ஒருவர்தான். இருவரல்ல. இவ்வாறு தக்லீத் ஷக்ஸீ-தனி நபரைப் பின்தொடருதல் மனித வாழ்வில் இன்றியமையாத ஒன்றாயிருக்கும் போது மார்க்கச் சட்டமான ஷரீஅத்திலும் தக்லீத் செய்யப்படும் இமாம் ஒருவராகத்தான் இருக்க முடியும். மேலும் பிரயாணத்தில் மூவர் இருப்பின் அவர்களில் ஒருவரை (மட்டுமே) இமாமாக நியமித்துக் கொள்ளுங்களென மிஷ்காத் என்னும் நூலில் பக்கம் 339ல் கூறப்பட்டுள்ளது.

இனி இமாம்களை நிராகரிப்போர் தங்களின் ஆட்சேபணைகளை இரு வகைகளாக்கிக் கேட்கின்றனர். அவற்றில் ஒன்று : குத்தலாகவும், நையாண்டியாகவும் கேட்பது ஒருவகை. ஆனால் இதற்குப் பதில் சொல்லிக் கொண்டிருப்பது நமக்குத் தரமல்ல. இரண்டாவது வகை : இமாம்களை பின்பற்றக் கூடிய நம்மை பலவாறு சொல்லி ஏமாற்றி தங்கள் கொள்கையை ஸ்திரப்படுத்த முயற்சிக்கும் வழி. இந்த வகை ஆட்சேபணைகளுக்கு நாம் பதில் சொல்லித்தானாக வேண்டும். ஆகையால் அவ்வகை வினாக்களையும், அதற்குரிய விடைகளையும் இப்போது பார்ப்போம்.

**வினா:-** நீங்கள் கூறுவது போல் அனைவர் மீதும் தக்லீத் அவசியமான ஒன்றெனில், நபித்தோழர்கள் முகல்லிதுகளாக இல்லாதிருப்பது ஏன்?

**விடை:-** நபித்தோழர்கள் மீது தக்லீத் அவசியமல்ல. காரணம் அண்ணல் நபிகளாரின் சகவாசப் பெருக்கால் அவர்கள் ஒவ்வொருவரும் பெரும் பெரும் இமாம்களாகவே திகழ்ந்தனர். இமாமுல் அஃளம் அபூ ஹனீபா, இமாம் ஷாபி ரஹ்மஹுமுல்லாஹ் போன்றோர் கூட பின்பற்றத் தகுதி வாய்ந்தவர்கள் அவர்கள். இதனால்தான் நபிகளார் தன் தோழர்களின் மாண்பினைக் குறித்து,...

اصحابي كانجوم بايهم اقتديتم اهتديتم

**என் தோழர்கள் விண்மீன்களைப் போன்றவர்கள். உங்களில் யார் அவர்களை பின்பற்றினாலும் நேர்வழி அடைவீர்கள்.**

ஆதாரம் : மிஷ்காத், பக்கம்-554.

இதில் மேற்கண்ட கேள்வி எப்படி இருக்கிறதெனில், "அண்ணல் நபிகள் நாதர் யாருடைய உம்மத்தினராகவும் இருக்கவில்லை. ஆதலால் நாமும் நாயகத்தின் உம்மத்துக்களல்ல. இவ்வாறு பிறரது உம்மத்தாக இல்லாதிருப்பதுதான் நாயகத்தின் சுன்னத்தாகிய நடைமுறையாகும்" என்று சொல்வதைப் போன்றுள்ளது.

இக்கேள்விக்கு நாம் இப்படிப் பதிலளித்தல் வேண்டும். அதாவது, அண்ணல் நபி தாமே நபியாயிருந்தனர். ஆதலால் அவர்கள் மற்றவரது உம்மத்தாக இருக்க வேண்டிய அவசியமில்லை. ஆனால் நாம் திருநபியின் உம்மத்தாக இருப்பது அவசியமாகும். இவ்வகையில் நபிகளாரின் உம்மத்துக்களாக நாம் இருப்பது நமக்கு கிடைத்தற்கரிய பெரும் அருட்கொடையாகும். இதுபோன்றே நபித்தோழர்களனைவரும் இமாம்களாயிருக்கின்றனர். அவர்கள் எந்த இமாமை பின்பற்ற முடியும்? நதியை விட்டும் தூரமாயுள்ள வயல்களுக்கு வாய்க்கால் வழியாகத்தான் தண்ணீர் பாய்ச்ச வேண்டும். இவ்வாறே தொழுகை நடத்தும் இமாமை விட்டும் தூரமாய் நின்று தொழுபவர் எத்தி வைப்பவரின் குரலைப் பின்பற்றி தொழவேண்டும். ஆற்றோரம் இருக்கும் வயல்களுக்கு வாய்க்கால் தேவையில்லை. கண்ணியமிகும் நபித்தோழர்கள் முதல் வரிசையில் நின்று தொழுவோரைப் போன்றவர்கள். எத்தகைய இடைப்பொருளுமின்றி நேரடியாகவே நபிகளாரது இதயத் தாமரையிலிருந்து மணம் பெறுவோர். நாம் அதை விட்டும் வெகு தொலைவிலிருக்கிறோம்.

ஆதலால் அந்நறுமணத்தை பெற்றுத் தரும் காற்றாகிய வாய்க்காலின் பக்கம் தேவையுடையவர்களானோம். பெரும் நதியிலிருந்து எத்தனையோ சிற்றாறுகள் பெருக்கெடுத்து ஓடத்தான் செய்கின்றன. இருப்பினும் அவற்றில் ஓடும் தண்ணீர் ஒன்றுதான். ஆனால் கங்கையென்றும், ஜமுனா என்றும், காவிரி என்றும், தாமிரபரணியென்றும் பெயர்கள்தான் வேறுபடுகின்றன.

இவ்வாறே அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் "ரஹ்மத்" என்னும் பெரும் சமுத்திரமாக இருக்கின்றனர். அவர்களின் இதயத்தினின்றும் இமாம் அபூஹனீபா ரஹிமஹுல்லாஹ்வின் உள்ளத்திற்கு ஒரு ஊற்றுப் பெருக்கெடுத்து ஓடிற்று. அதைப் பருகியவர்கள் ஹனபிகள்.

இவ்வாறே ஒவ்வொன்றையும் ஊகித்தறிந்து கொள்ளுங்கள். இதில் ஊற்றுப் பெருக்கு நமக்கு மிக முக்கியத் தேவையானவை.

ஒன்று தெரியுமா? நபிகளாரின் ஹதீஸுக்குரிய ஆதாரங்கள் நமக்குத் தேவை. நபித்தோழர்களுக்கு அவசியமில்லை. இதுபோன்றே தக்லீத் நமக்கு அவசியமானது. நபித்தோழர்களுக்கு அவசியமல்ல.

**வினா:-** வழிகாட்ட வான்மறையும், வள்ளல் நபியின் பொன் மொழியுமே நமக்குப் போதுமானதென சொல்லலாம்! காரணம், ولارطب ولايابس الا في كتاب مبين **எந்தப் பச்சை இலைகளும் காய்ந்த இலைகளும் கீழே விழுவதில்லை. அவை திருமறையில் குறிக்கப்பட்டிருந்தேயொழிய** (அல்குர்ஆன், ஸூறா-6, வசனம்-17) என்றும்,...

ولقد يسرنا القرآن للذكر فهل من مدكر **சிந்திப்பதற்காக குர்ஆனை நாம் எளிதாக்கியுள்ளோம். (சிந்திப்போர் உண்டா?)** (அல்குர்ஆன், ஸூறா-54, வசனம்-17) என்றும் வான்மறை விளக்குவதால் திருமறை அனைவருக்கும் எளிதான ஒன்றெனத் தெரிவதால் முஜ்தஹிதீன்களான இமாம்களை எதற்காக நாம் தக்லீத் செய்ய வேண்டும்?

**விடை:-** வான்மறையும், நபிமொழியும் நமக்கு வழிகாட்ட போதுமான ஒன்றுதான். எல்லாமே அவற்றில் உள்ளதுதான். எனினும் அவற்றிலிருந்து மார்க்கச் சட்டங்களை பிரித்தெடுக்கும் ஆற்றல் வேண்டுமல்லவா!

கடலில்தான் முத்துக்கள் இருக்கின்றன. ஆனால் அவற்றை எடுப்பதற்கு முத்துக் குளிப்போர் தேவையல்லவா! இதுபோல் நமக்கு இமாம்களாய் வந்தவர்கள் குர்ஆன் ஹதீஸ் என்னும் கடலுக்குள் மூழ்கி மார்க்கச் சட்டங்களெனும் முத்துக்களை வெளிக்கொண்டு வருபவர்கள்.

அதுமட்டுமா! நோய்களுக்குரிய தீர்வுகளனைத்தும் அது சம்பந்தப்பட்ட வைத்திய சாஸ்திர நூல்களில் நிரம்பிக் கிடக்கின்றன. எனினும் நோய்களுக்கு நிவாரணம் தேடி மருத்துவரிடம் நாம் ஏன் செல்கிறோம்? அத்துடன் அவர்களது ஆலோசனைப்படி நாம் ஏன் நடந்து கொள்கிறோம்? இதுபோன்றுதான் குர்ஆனும், ஹதீஸும், இமாமும் என்பதை நீங்கள் ஏன் விளங்கிக் கொள்ளவில்லை.

தவிர, "குர்ஆனை நாம் எளிதாக்கியுள்ளோம்" என்னும் திருமறை வசனத்திற்கு "**மனனம் செய்ய**" என்று திருத்தி விளங்குங்கள். மாறாக "மார்க்கச் சட்டமியற்ற" என்று தவறாக விளங்காதீர்கள்.

அன்றி திருமறையிலிருந்து மார்க்கச் சட்டங்களை பிரித்தெடுத் தல் எளிதான, இலகுவான ஒன்றாயிருக்குமாயின் நபிமொழியான ஹதீஸ் எதற்கு? குர்ஆனில் தான் அனைத்தும் கூறப்பட்டுள்ளதே! போதாக் குறைக்கு உங்களின் கருத்துப்படி எளிதாகவும் ஆக்கப் பட்டுள்ளதே! பின்னர் குர்ஆனை விளக்கப்படுத்த ஒரு நபி எதற்காக வரவேண்டும்? அத்துடன் அதே குர்ஆன் கூறும் மற்றோர் வாக்கி யத்தை இப்போது பாருங்கள்.

ويعلمهم الكتاب والحكمة

அவர்களுக்கு குர்ஆனையும் (அதன்) தத்துவார்த்தங் களையும் கற்றுக் கொடுப்பதற்காக நாம் நபியை (ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம்) அனுப்பினோம். அல்குர்ஆன். என்று குர்ஆன் கூறுகின்றது. ஆகையால் வான்மறையும் வருசைநபி வழிமுறையும் (ஹதீஸ்) மனித இனத்துக்கு மிக மிக இன்றியமையாத ஆன்மீக மருந்துகளாகும். இமாம்கள் ஆன்மீக மருத்துவ மேதை களாகும்.

வினா:- اتخذوا احبارهم ورهبانهم اربابا من دون الله அவர்கள் அல்லாஹ்வையன்றி பாதிரிகளையும், பூசாரிகளையும் தங்கள் கடவுள்களாக எடுத்துக் கொண்டனர் (அல்குர்ஆன், 9:32) என்றும், فان تنازعتم في شيئ فردوه الى الله ورسوله எதிலேனும் நீங்கள் பிணங்கிக் கொண்டால் அல்லாஹ் மற்றும் அவன் தூதரின் பக்கமே நீங்கள் மீளுங்கள். ان هذا صراطي مستقيما فاتبعوه ولاتتبعوا السبيل فتفرق بكم இதுவே செவ்வையான என் வழி. அதையே பின்பற்றுங்கள். அதற்கு மாற்றமான வழி களை பின்பற்றாதீர்கள். அன்றி பின்பற்றுவீர்களாயின் என் வழியை விட்டும் நீங்கள் மாறி விடுவீர்கள் (அல்குர்ஆன், 6:158) என்றும், قالوا بل نتبع ما الفينا عليه أبائنا இறைவன் இறக்கி அருளியவற்றை நீங்கள் பின்பற்றுங்களென (காபிர்களிடம் சொல்லப்பட்டால்) எங்கள் மூதாதையர்களை நாங்கள் எதன்மீது கண்டோமோ, அதையே பின்பற்றுவோம் என்று கூறுவர் (அல்குர்ஆன், 2:17) என்றும் திருமறை கூறுவதால் அல்லாஹ் ரஸூலின் சட்டங்களுக்கு முன் இமாம்களின் சட்டங்களை நம்புதல் காபிர்களது வழிமுறையாகும். அன்றி நேர்வழி என்பது ஒன்றாக மட்டுந்தானிருக்க முடியும். இந்நிலையில் ஹனபி, ஷாபி போன்ற நான்கு வழிகளும் வழிகெட்டவைகளாகும் என்றும் தக்லீத் செய்பவர்

கள் கெட்டவர்களென்றும் திருமறையின் மேற்கண்ட வசனங்கள் கூறுகின்றனவே?

**விடை:-** திருமறை எந்தத் தக்லீதை தீயது எனக் கூறுகின்றதோ, அதைப்பற்றி முன்னால் நாம் விபரித்து விட்டோம். இங்கு மாற்றமான வழி என்பதன் கருத்து யூதக் கிறிஸ்தவப் பாதிரிகளின் வழியாகும். இமாம் களது வழியல்ல.

பின்னும் ஒரு ரயில் நிலையம் செல்வதற்கு நான்கு வழிகள் இருப்பது போலவும், நான்கு வழிகளில் சிற்றாறுகள் பிரிந்து செல்வது போன்றது தான் இமாம்களின் வழி.

ஆனால் இமாம்களை நிராகரிப்போரின் வழி இவைகளுக்கு அப்பாற்பட்ட வழியாகும். இவர்கள் "தனாயி" என்றும், "கஜ்னவி" என்றும் வழங்கப்படுகின்றனர். அத்துடன் இவர்களது கொள்கை மாறுபட்டுப் போனதால் இவர்களின் வழியும் மாற்றமான ஒன்றாகி விட்டன. ஆனால் ஹனபி, ஷாபி என்னும் இமாம்களின் வழிமுறை அப்படியல்ல. இந்நால்வரும் கொள்கை ரீதியில் ஒன்றுபட்டே இருக்கின்றனர். ஆனால் கிரியைகளில் மட்டுந்தான் வேறுபாடு. இது நபித்தோழர்களுக்கிடையே நடந்த கருத்து வேறுபாடுகளைப். போன்றதாகும்.

**வினா:-** தக்லீத் செய்வதால் இறைவனல்லாதோரை தனக்கு தீர்ப் பாளராக ஏற்படுத்திக் கொள்ளும் நிலை உருவாகின்றது. இது ஷிர்க்காகும். எனவே "தக்லீதே ஷக்ஸீ" என்னும் தனி மனிதரைப் பின் தொடர்தல் ஷிர்க்காகும் என்று சொல்லலாமா? காரணம், ان الحكم الا لله **அல்லாஹ்விற்கேயன்றி வேறு எவருக்கும் உரிமையில்லை** என்று இறைவன் தன் திருமறையில் கூறுவதைப் பாருங்கள்.

**விடை:-** இறைவனல்லாதோரை நீதிபதியாக்குவதோ, வழக்குக் கென நியமித்தலோ ஷிர்க்கெனில், அண்ணல் நபிகளாரின் ஹதீஸை நம்புவதும் ஷிர்க்காகி விடும்.

மேலும் அனைத்து முஹத்திஸீன்களான ஹதீஸ் கலை வல்லு னர்கள், முபஸ்ஸிரீன்களான வேத விரிவுரையாளர்களும் முஷ்ரிக் கீன்களாகி விடுவர்.

இன்னும் இமாம் திர்மிதி, அபீதாவூத் ரலியல்லாஹு அன்ஹுமா

போன்றோரனைவரும் ஒரு இமாமைப் பின்பற்றிய முகல்லிதுகள் தான். இமாம் புகாரீ கூட முகல்லிதுகளின் சிஷ்யர் தான்.

பார்க்க : ஐனீ ஷரஹு புகாரீ.

ஆக எல்லோருமே உங்கள் கருத்துப்படி முஷ்ரிக்குகள் தானா? இக்கேள்விக்கு நமது தீவானெ ஸாலிக்கில் இப்படிப் பதில் கூறியுள்ளோம்.

இமாமுல் அஃளம் அவர்களே! உங்களை தக்லீத் செய்தல் ஷிர்க்கென்று இருக்குமாயின், புகாரீ, முஸ்லிம், இப்னுமாஜா போன்றோரனைவரும் உங்கள் துணையின்றி ஒன்றுமில்லை என்று நாம் பாடியுள்ளோம்.

அதுமட்டுமா! ஹதீஸை அறிவிக்கும் அறிவிப்பாளர் வரிசையில் பாஸிக்கா (பாவியா) ன ஒரு அறிவிப்பாளர் நுழைந்து விடுவாரேயானால் அந்த ஹதீஸை பலவீனமானதென்றோ, அல்லது புனையப்பட்டதென்றோ சொல்லப்படுவது போல முகல்லிதான அறிவிப்பாளர் ஒருவர் புகுந்து விட் டால் அவரை முஷ்ரிக்கான அறிவிப்பாளர் என்றல்லவா சொல்ல வேண்டும்? அத்துடன் இத்தகைய அறிவிப்பை எவ்வாறு ஏற்றுக் கொள்ள முடியும்?

ஆக மேற்படி கேள்வி பிழையானது மட்டுமல்ல, விபரீதமானதும் கூட. இமாம் திர்மிதீ, அபீதாவூத் போன்றோர் முகல்லிதுகளாதலால் அவர்கள் முஷ்ரிக்குகளாகி அவர்கள் மூலம் அறிவிக்கப்பட்ட ஹதீஸ்கள் தடை செய்யப்பட்டால், அதற்குமுன் இமாம் புகாரீயின் அறிவிப்புக்கள் அனைத்தும் தடை செய்யப்பட்டுப் போய்விடும். காரணம் இவர்களனைவருமே முகல்லிதுகளாகும்.

அவ்வாறாயின் ஹதீஸை எங்கிருந்து எப்படிக் கொண்டு வருவது? உங்களது இவ்வாதம் எத்தனை அனர்த்தமான முடிவுக்கு வருகின்றது பார்த்தீரா? பின்னும் இறைவன் தன் மாமறையில்,...

وان خفتم شقاق بينهما فابعثوا حكما من اهله
وحكما من اهلها

**(தம்பதிகளான) அவ்விருவருக்கிடையில் பிரிவினையை அறிவீர்களாயின் அவன் புறத்திலிருந்து ஒரு நீதிமானை அனுப்பி வையுங்கள்.** அல்குர்ஆன், ஸூறா-4, வசனம்-34.

என்று கூறுவதன் மூலம் இறைவன் மனிதர்களுக்கு தமக்கிடையில் நீதிபதிகளை நியமிக்கலாம் என்று கூறுவதை கவனியுங்கள்.

இன்னும் ஹஜ்ரத் முஆவியா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஸிப்பீன் போரின் போது நீதிபதியாக ஒருவரை நியமனம் செய்துள்ளனர். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் "பனூ குரைழா" வழக்கில் ஹஜ்ரத் ஸஃதிப்னு மஆத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை நீதிபதியாக நியமித்துள்ளனர்.

இனி வினாவில் குறிப்பிட்டுக் காட்டப்படும் வசனத்திற்கு எதார்த்தமான தீர்ப்பு வழங்குதல் இறைவனுக்கேயன்றி வேறொருவருக்குமில்லை என்பதாகப் பொருள் கொள்ள வேண்டும். அத்துடன் உலமாக்கள், புகஹாக்கள், மெய்ஞானப் போதகர்கள் மற்றும் ஹதீஸில் வந்துள்ளவர்களது தீர்ப்புகளனைத்தும் இறைவனின் துணை கொண்டு வழங்கப்பட்ட தீர்ப்புகளாகும்.

அவ்வாறின்றி இறைவனல்லாதோரை தீர்ப்பாளரான நீதிபதியாக நம்புதல் ஷிர்க்கென்று கருத்துரை வழங்கத் தலைப்பட்டபட்டோமானால் இன்று உலகில் இயங்கும் நீதிமன்றம் பஞ்சாயத்து போன்றவற்றில் நியமிக்கப்பட்டவர்களை நம்புவதும் ஷிர்க்காகி விடும். இந்நிலையில் உலகில் எவரும் ஷிர்க்கை விட்டு தப்பவே முடியாது.

**வினா:-** முஜ்தஹிதாகிய இமாம்களின் கியாஸாகிய அனுமானித்தலானது வெறும் எண்ணமாகும். (திட்டப்படுத்தப்பட்டதல்ல) பின்னும் அனுமானித்தல் குற்றமாகும். இவ்வாறு அனுமானிப்பதை திருமறை தடுத்துள்ளது. அதாவது,...

يايها الذين أمنوا اجتنبوا كثيرا من الظن ان
بعض الظن اثم ولا تجسسوا ولا يغتب بعضكم بعضا

**விசுவாசிகளே! எண்ணத்தில் நின்றும் அதிகமானதை தவிர்த்துக் கொள்ளுங்கள். நிச்சயம் சில எண்ணம் தவறில் ஆழ்த்துவதாயுள்ளது. (இஸ்லாமியர்களின்) குறைகளை துருவிப் பார்க்காதீர்கள். இன்னும் உங்களில் சிலர் சிலரைப் பற்றி புறம் பேசவும் வேண்டாம்.**

அல்குர்ஆன், ஸூறா-49, வசனம்-12.

ஆகையால் மார்க்கத்தில் திருமறையின் சட்டங்களைக் கொண்டு மட்டுமே கியாஸ் செய்யப்பட வேண்டும்.

**விடை:-** கியாஸ் என்னும் அனுமானித்தல் என்று எதற்குச் சொல்வது? அதைப்பற்றிய சட்டங்களென்ன? என்பதைப்பற்றி இந் நூலின் முடிவுரையில் குறிப்பிட்டுள்ளோம். அங்கு பார்க்க.

**வினா:-** எந்த ஹதீஸ் சரியானதென ஊர்ஜிதமாயிற்றோ அது தான் என் மத்ஹபாகுமென இமாம் அபூஹனீபா ரஹிமஹுல்லாஹ் அவர்கள் கூறியுள்ளனர். இதில் அவர்களின் சொற்கள் (சட்டங்கள்) ஹதீஸுக்கு மாற்றமானவையாக இருப்பதை கண்டதால் அவர்களின் மத்ஹபை தக்லீத் செய்வதை நாங்கள் விட்டு விட்டோம்.

**விடை:-** சரியான ஹதீஸுக்கெதிராக எனது சொல் நிகழ்ந் திருக்குமாயின், (அப்போது எனது சொல்லை விட்டுவிட்டு) ஹதீஸ் படி அமல் செய்வது தான் எனது மத்ஹபாகுமென்பது தான் இமாமவர் களின் கட்டளை. இனி எந்த இடத்தில் திருமறை மற்றும் ஹதீஸின் தெளிவான ஆதாரம் கிடைக்கவில்லையோ, அங்குதான் முஜ்தஹிதீன் களின் கியாஸ் என்னும் அனுமானித்தல் வருமென்பது எதார்த்த நிலை. இந்நிலையில் கியாஸுக் கெதிராக ஊர்ஜிதமான ஹதீஸ் வந்தபோது கியாஸை கைக்கொள்ள வேண்டிய அவசியமில்லை என்பது அனைத்து இமாம்களிடமும் ஏகோபித்த முடிவாகும். இதில் எல்லா ஹதீஸ்களையும், அதன் தொடர் அறிவிப்பான் இஸ்னாதையும் ஆராய்ந்து இமாம் அபூஹனீபா ரஹிமஹுல்லாஹ் அவர்கள் இந்தந்த ஹதீஸ்களிலிருந்துதான் சட்டங்களை பிரித்தெடுத்தார்களென்று தெரிந்து வைத்துள்ள ஒரு முஹத்திஸை (ஹதீஸ் கலை நிபுணரை) இன்று நம்மால் காண முடியுமா? பின்னும் இன்று வாழும் முஸ்லிம் களது கண்ணோட்டம் ஸிஹாஹுஸ்ஸித்தா என்னும் ஆறு ஹதீ ஸுத் திரட்டுகளின் பக்கம் கூட செல்லாதிருக்கும்போது இமாமவர்கள் இன்ன சட்டத்தை இன்ன ஹதீஸின் ஆதாரத்தைக் கொண்டு எடுக்கவில்லை. இச்சட்டம் ஹதீஸுக்கு மாற்றமானதென எவ்வாறு முடிவு செய்ய முடியும்? அன்றி அண்ணல் நபியவர்கள்,...

اذا بلغكم مني حديث فاعرضوه على كتاب الله فان وافقه فاقبلوه والا فردوه

**உங்களுக்கு என் தரப்பிலிருந்து ஹதீஸ் கிடைத்தால் அதனை திருமறையைக்கொண்டு சரிபாருங்கள். சரியாயின் ஏற்றுக் கொள்ளுங்கள். இல்லையெனில் தள்ளி விடுங்கள்.**

*பார்க்க : தப்ஸீர் அஹ்மதிய்யா, பக்கம்-4.*

என்று கூறியிருப்பதால் இந்த ஹதீஸை ஆதாரமாகக் கொண்டு, பெரும்பாலான ஹதீஸ்கள் திருமறைக்கு மாற்றமாக இருப்பதால் ஹதீஸ்களை நாங்கள் விட்டு விட்டோமெனக் கூறுவீர்களா?

இன்னும் இறந்தோரின் சொத்துக்களை அதன் வாரிசுதாரர் களுக்கு பாகப்பிரிவினை செய்து கொடுங்களென்று திருமறை கூறுகின்றது. ஆனால் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹு வஸல்லமவர்களின் ஹதீஸ் இறந்தோரின் வாரிசுகளுக்கு பாகப்பிரி வினை கிடையாதெனக் கூறுகின்றதென ஒருவர் சொன்னால் எவ் வாறு அவரது சொல் மறுக்கப்படுமோ, அவ்வாறு வினா தொடுத்த உங்களின் சொல்லும் மறுக்கப்படுகிறது.

**வினா:-** இமாமுல் அஃளம் அவர்களுக்கு அதிகமான ஹதீஸ்கள் கிடைக்கவில்லையாதலால் அவர்களின் ஹதீஸ் பற்றிய அறிவிப்புகள் மிகக் குறைந்தே காணப்படுகின்றன. அப்படிக் கிடைத்துள்ள அக் குறைவான ஹதீஸ்களும் பலவீனமானவையாதலால் அவற்றை நாம் எவ்வாறு ஏற்றுக் கொள்ள முடியும்?

**விடை:-** இமாமவர்கள் மிகப்பெரும் முஹத்திஸாக விளங்கியவர் கள். அவர்கள் ஹதீஸை விளங்காது இத்தனை மார்க்கச்சட்டங்களை எவ்வாறு பிரித்தெடுத்திருக்க முடியும்? பின்னும் இமாம் முஹம்மத் ரஹிமஹுல்லாஹ்வால் தொகுக்கப்பட்ட "முஸ்னத் இமாம் அபூ ஹனீபா" என்னும் நூல் இமாமவர்களின் ஹதீஸ் கலைஞானத்தை இன்றும் பறைசாற்றிக் கொண்டுள்ளது. அத்துடன் ஹஜ்ரத் அபூ பக்கர் ஸித்தீக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப் பட்ட ஹதீஸ்கள் குறைந்து காணப்படுவதால் அவர்கள் ஒரு முஹத்தி ஸாக இல்லையெனக் கூறுவீர்களா?

எனவே இமாமவர்களின் ஹதீஸ்களனைத்தும் ஸஹீ ஹானவை, சரியானவைகளாகும். காரணம் அவர்களின் காலம் நபிகளாரின் காலத்திற்கு மிகச் சமீபமான காலமாகும்.

அடுத்து இமாமவர்கள் சட்டமியற்ற எடுத்துக்கொண்ட ஹதீஸ் கள் பலவீனமானவைகளல்ல. எனினும் இமாமுக்குப் பின் வந்தவர் களில் அந்த ஹதீஸை அறிவித்த அறிவிப்பாளர்கள் பலவீனமானவர் களாதலால் இமாமவர்களுக்கு இதில் எத்தகைய பங்கமும் ஏற்பட கொஞ்சங்கூட வழி கிடையாது. இன்னும் ஹதீஸ்களை அறிவிப் போரது வரிசை நீண்டு கொண்டே செல்லச் செல்ல அவ்வறிவிப்

பாளர்களது பட்டியல் வாயிலாக பலவீனம் ஏற்பட்டதென்பதை நீங்கள் விளங்கிக் கொள்ளுதல் நலம்.

இனி ஹஜ்ரத் முஆவியா மற்றும் அலி ரலியல்லாஹு அன்ஹுவாகிய இருவருக்கிடையேயும், இதேபோன்று அலீ, ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவரிடையேயும் போர்கள் நடந்துள்ளது. இதில் நியாயம் என்பது இவ்விருவரில் எவராவது ஒருவரது பக்கம்தானிருக்க முடியும். இருந்தும் நாம் இருவரும் நியாயத்தின் பக்கந்தான் இருந்தனரென்று கூறுகிறோம். காரணம் இருவரும் முஜ்தஹிதீன்களாக இருந்ததால் அவரவர் தங்களது இஜ்திஹாதின்படியே போரிட்டதால் இருவரும் நியாயத் துக்காகத்தான் போரிட்டனரென்று நாம் கூறுவதுடன், இறைவனும் இவர்களை குற்றம் பிடிக்க மாட்டான் என்பதுதான் மார்க்க கொள்கையாகும்.

மேலும் ஒரு காட்டில் கிப்லாவின் திசை தெரியாது திகைத்து நிற்பவன் தனது இஜ்திஹாதைக் கொண்டு நான்கு ரக்அத்துத் தொழு கையை நான்கு திசைகளையும் நோக்கித் தொழுதால் அவனது அத் தொழுகை நிறை வேறிவிடும். (அதை அவன் திருப்பித் தொழ வேண் டிய அவசியமில்லை) இந்நிலையில் அவனுக்கு நான்கு கிப்லாக்களா கின்றன. எனினும் எதார்த்தத்தில் கிப்லா ஒன்றுதான். அவ்வாறு முஜ்தஹிதுகள் தவறிழைத்து விட்டாலும் கூட அதற்கு அவர்களுக்கு ஒரு நன்மை கிடைக்கும். மாறாக தண்டிக்கப்படவும் மாட்டார்கள். இதுபோன்றே தாவூத் அலைஹிஸ்ஸலாமவர்கள் இஜ்திஹாத் செய்து வழங்கிய தீர்ப்பொன்று நீதியானதென திருமறை விளக்கம் தருவ துடன் அவர்களில் ஒருவரையும் இறைவன் தண்டிக்கவில்லை. அதற் குப் பதிலாக,...

كلا أتينا حكما وعلما

**நாம் (இவர்களில் ஒவ்வொருவருக்கும் தத்துவ ஞானத் தைக் கொடுத்திருக்கிறோம்.** அல்குர்ஆன், ஸூறா-21, வசனம்-79. என்றுகூறி பெருமைப்படுத்துகிறான் இறைவன். இன்னும் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்,...

اذا حكم الحاكم فاجتهد واصاب فله اجران واذا حكم
فاجتهد فاخطأ فله اجر واحد (متفق عليه)

**நீதிமான் தீர்ப்பளித்தால் (அத்தீர்ப்பில்) அவன் இஜ்தி**

ஹாத் செய்து நீதியைப் பெற்று விடுவானேயாயின் அவனுக்கு இரு கூலிகளுண்டு. அவ்வாறின்றி இஜ்திஹாதில் தவறு செய்து விடுவானாயின் அவனுக்கு ஒரு கூலியுண்டு.
பார்க்க : மிஷ்காத், பக்கம்-324 என்றும் கூறியுள்ளனர்.

ஷாபி மத்ஹபைச் சார்ந்தவர்கள் தொழுகையில் குனியும் (ருகூவு) போதும் நிமிரும் (கியாமின்) போதும் கைகளை உயர்த்திக் கீழே விடுகின்றனர். இனி ஒரு இமாமைப் பின்பற்றாதவர் அவ்வாறு உயர்த்தினால் அது குற்றமாகி விடுவதன் காரணமென்ன என்ற வினாவுக்குரிய விடையும் இது வரை நாம் சொல்லி வந்த விளக்கத்தைக் கொண்டு தெரிந்து கொள்ளலாம்.

காரணம் மார்க்கத்தின் தீர்ப்பாளரான ஷாபி இமாமின் தீர்ப்பைக் கொண்டு ஷாபி மத்ஹபைச் சார்ந்தோர் கைகளை உயர்த்திக் கீழே விடுகின்றனர். இது ஒருவேளை தவறாக இருப்பினும் அதற்கு மன்னிப்பு உண்டு. இனி இமாமை பின்பற்றாதவர் எந்த இமாமுடைய தீர்ப்பைக் கொண்டும் கையை உயர்த்தாது தாமே தமது ஆய்வைக் கொண்டு உயர்த்துவதால், அப்படி உயர்த்துதல் ஒருக்கால் சரியானதாயிருந்தாலும் அவன் குற்றவாளிகளது தரப்பையே சார்கிறான். உதாரணமாக, இன்று நம்மிடையேயுள்ள நீதிபதி ஒருவரது தீர்ப்பைப் பெறாது ஒருவர் சுயமாக ஒன்றை செய்து விடுவாராயின் அவர் குற்றவாளியாகி விடுகிறார். ஆனால் அதே வேலையை ஒரு நீதிபதியைக் கொண்டு ஒருவர் செய்தால் அவர் குற்றவாளியல்ல என்பதை நாம் தெரிந்து கொண்டிருக்கிறோம். ஒருவேளை அந்நீதிபதி வழங்கிய தீர்ப்பு தவறான ஒன்றாயிருப்பினும் அதைச் செய்தவன் குற்றவாளியல்ல. இது இன்றும் உலகில் நடந்து வரும் வழக்கம்.

இன்னும் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஒரு இமாமின் ஹோதாவில் பத்ரு யுத்தத்தில் பிடிக்கப்பட்ட கைதிகளை விடுவிக்க பித்யா - பரிவர்த்தனை பணத்தைப் பெற்றுக் கொண்டு விடுவித்தனர். அதன்பின் அத்தீர்ப்புக்கு மாற்றமாக இறை வசனம் இறங்குகின்றது. பித்யா வாங்கப்பட்டதை இறைவன் திருப்பிக் கொள்ளவில்லை. இருப்பினும் பித்யாவாக வாங்கப்பட்ட அப்பணம் திருப்பித் தரப்படவில்லை. மாறாக அவற்றை நன்கு சாப்பிடுங்களென்பதாக கட்டளை வருகின்றது. இதுபற்றி இறைவன்,...

فكلوا مما غنمتم حلالا طيبا

கனீமத் (அதாவது பித்யா) பொருட்களில் நின்றும் சுத்த மான ஹலாலானதாக இருக்கும் நிலையில் சாப்பிடுங்கள்.

அல்குர்ஆன், ஸூறா-8, பக்கம்-69.

தவறாக அளிக்கப்பட்டு விட்ட ஆராய்ச்சித் தீர்ப்புகள் குற்றம் அல்ல என்பதை இதன்மூலம் நாம் தெரிந்து கொள்ளலாம்.

முடிவுரை:-

## கியாஸ் என்பது பற்றி,...

ஷரீஅத்திற்கு ஆதாரம் நான்கு. அவையானவன:

(1) திருக்குர்ஆன் என்னும் தெய்வீக மறை.

(2) ஹதீஸ் என்னும் நபிகளாரின் நன்மொழி.

(3) இஜ்மாவு என்னும் உம்மத்தினர்களது ஒருங்கிணைந்த முடிவு.

(4) கியாஸ் என்னும் அனுமானித்தல்.

இங்கு திருமறையின் கட்டளையும், "பெரும்பான்மையாள ருடன் சேர்ந்திருங்கள்" என்னும் திவ்ய நபிமொழியும் இஜ்மாவுக்குரிய ஆதாரங்களென நாம் முன்னால் தெரிந்து கொண்டோம். இனி "கியாஸ்" என்னும் அரபிப் பதத்திற்கு மதிப்பிடுதல், ஒழுங்குபடுத்தல், அனுமானித்தல் என்பது பொருளாகும்.

ஷரீஅத்துடைய பரிபாஷையில் "பரஇய்யாவாகிய" உட்பிரி வைச் சார்ந்த மார்க்கச் சட்டங்களை அஸலிய்யத்தான மார்க்கச் சட் டங்களுக்கு நேர்பாடாக சமமாக்குதல் என்பது அர்த்தமாகும். அதாவது திருமறை மற்றும் ஹதீஸில் காணமுடியாத ஒரு. சட்டப்பிரச்னை வரும்போது அதேபோன்று வேறு ஏதாவது ஒரு சட்டம் திருமறை யிலோ அல்லது ஹதீஸிலோ இருக்கிறதாவென ஆராய்ந்து பார்த்து அச்சட்டத்திற்குரிய காரணத்தையும் கண்டுபிடித்து, அக்காரணம் தற்போது எழுந்துள்ள சட்டப் பிரச்னையிலும் இருக்கின்றதாவென ஒப்பிட்டுப் பார்த்து இரண்டுக்குமுரிய காரணம் ஒன்றாக இருந்தால் அப்போது அம்மூலச் சட்டத்திலிருந்து எழுந்துள்ள இப்பிரச்னைக்கும் ஒரு சட்டம் வகுப்பதற்குப் பெயர்தான் கியாஸ் என்பதாகும்.

உதாரணமாக மனைவியின் பின் துவாரத்தில் புணர்தல் கூடுமா? என்று ஒரு வினா எழுப்பப்பட்டால் அதற்கு மாதவிடாய் காலத்தில் மனைவியை புணர்தல் அசுத்தமான ஒன்றாதலால் அது

மார்க்கத்தில் விலக்கப்பட்டுள்ளதென்னும் இக்காரணத்தை காட்டி பின்துவாரத்தில் புணர்வதும் அசுத்தமாதலால் இதையும் ஹராம் என்று கியாஸ் செய்து தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.

இதேபோன்று ஒரு தந்தை பெண்ணொருத்தியை விபச்சாரம் செய்திருந்தால் அவளை அத்தந்தையின் மகன் திருமணம் செய்து கொள்வது கூடுமா? என்னும் பிரச்னை உருவானால், அவளை தந்தை திருமணம் செய்து வாழ்ந்திருந்தால் அவன் மகனுக்கு ஹராமல்லவா! அதுபோன்று தான் தந்தையால் விபச்சாரம் புரியப்பட்ட அப்பெண்ணையும் மகன் திருமணம் செய்துகொள்வது ஹராம் என்று கியாஸ் செய்து தீர்ப்பு வழங்கப்படும். இது ஹனபி மத்ஹபின் சட்டமாகும். ஷாபி மத்ஹபில் விபச்சாரத்தின் மூலம் "நஸபு" என்னும் வம்சம் தரிபடாதாகையால் தந்தை விபச்சாரம் செய்த பெண்ணை மகன் மணமுடித்துக் கொள்ளலாம்.

இவ்வாறு ஒன்றை மற்றொன்றுடன் இணைத்து அனுமானித்து சட்டத்தை பிரித்தெடுப்பதற்கு கியாஸ் என்று கூறப்படுகின்றது. இப்படி கியாஸ் செய்வதற்கு அவர் முஜ்தஹிதாக இருத்தல் மிக மிக அவசியம். குறைமதியாளர்களின் கியாஸ் காரியத்திற்கு உதவாது. காரணம் கியாஸ் என்பது அசலில் ஷரீஅத்தின் ஒரு சட்டமல்ல. குர்ஆன், ஹதீஸின் சட்டம்தான். அதனை கியாஸ் வெளிப்படுத்தியுள்ளது அவ்வளவு தான். இதில் கியாஸ் செய்தல் ஆகுமான-மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட ஒன்றுதான் என்பதை குர்ஆன், ஹதீஸ், நபித்தோழர்களின் நடைமுறைகள் ஆதாரப்படுத்துகின்றன. இதைப்பற்றி திருமறையில்,...

فاعتبروا يا اولى الابصار

**சிந்தனையாளர்களே! படிப்பினை பெறுங்கள்.**

அல்குர்ஆன், ஸூறா-59, வசனம்-2.

என்று கூறுகின்றான் இறைவன். அதாவது இறை நிராகரிப்பாளர்களான காபிர்களது கோரமான நிலைகளின் மீது உங்களின் நிலைகளையும் நீங்கள் கியாஸ்படுத்திப் பாருங்கள். அவர்களைப் போன்று நீங்களும் வாழ்வீர்களாயின் உங்களின் நிலையும் இப்படித்தான் வந்து முடியுமென்று படிப்பினை பெற்றுக் கொள்ளுங்கள் என்பது இவ்வசனத்தின் கருத்தாகும்.

மேலும் திருமறை மறுமையை நித்திரை மீதும், வரண்டு போன பூமி பின்னர் செழிப்பாகுவதன் மீதும் கியாஸ்படுத்திக் கூறுகின்றது.

துவக்க முதல் இறுதிவரை காபிர்களின் நிலைகளை உவமான நயத்தோடு திருமறை எடுத்தியம்புகின்றது. இதுவும் கியாஸ்தான்.

இன்னும் இமாம் புகாரி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் தமது புகாரி ஷரீப் என்னும் கிரந்தத்தில் "கிதாபுல் இஃதிஸாம்" என்று தலைப்பிட்டு, "எந்தச் சட்டத்தை இறைவன் தெளிவாக்கி வைத்தானோ, அந்த அசல் சட்டத்தைக் கொண்டு அதுபோன்றதொரு சட்டத்தை ஒப்பாக்கினர். அதைக்கொண்டு கேட்டவர் விளங்கிக் கொள்ள" என்னும் ஒரு பாடத்தை அமைத்து அதில் ஒரு பெண்ணுக்கு நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கியாஸ் செய்து அனுமானித்துக் கூறிய சட்ட விளக்கமாகிய ஹதீஸொன்றையும் இடம் பெறச் செய்துள்ளனர்.

ان امرأة جائت الى النبي صلىالله عليه وسلم فقالت ان امي نذرت ان تحج افا حج عنها قال نعم حجي عنها ارأيت لو كان على امك دين اكنت تقضينه قالت نعم قال اقضوا الذي له فان الله احق بالقضاء

இவ்வாறே ஒரு பெண் நபிகளாரின் சமூகத்திற்கு வந்து, யா ரஸூலல்லாஹ்! எனது தாய் ஹஜ்ஜுச் செய்ய நேர்ச்சை செய்திருந்தனர். அவருக்காக நான் ஹஜ்ஜுச் செய்யலாமா? என்று வினவிட, அதுகேட்ட நபிகளார் ஆம்! அவருக்காக நீ ஹஜ்ஜுச் செய். உன்தாய் மீது கடனிருந்தால் அதனை நீ நிறைவேற்ற மாட்டாயா? என்று திருப்பி வினவ, அதற்கவள்; ஆம் என்று சொன்னாள். அவ்வாறாயின் இறைவனுக்குரிய கடனை நிறைவேற்று. ஏனெனில் கடன் நிறைவேற்றப்படுவதற்கு இறைவன் மிக உரிமையுள்ளவனாயிருக்கிறான் என்பதாகக் கூறினர்.

இதுபோன்றே அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஹஜ்ரத் மஆதிப்னு ஜபல் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை எமன் நாட்டுக்கு கவர்னராக நியமித்தனுப்பும்போது ஏதேனும் வழக்குகள் வந்தால் அதனை எப்படித் தீர்ப்பளிப்பீர்? என்று வினவ, இறைவனின் திருவேதத்தைக் கொண்டு தீர்ப்பு அளிப்பேனென்று மஆதவர்கள் சொல்ல, இறை வேதத்தில் தெளிவாக அவ்விஷயத்தை நீர் பெறாவிட்டால்? இறைவனின் திருத்தூதரது வழி

முறையைக் கொண்டு தீர்ப்பளிப்பேனென்று மஆதவர்கள் திரும்பச் சொல்ல, இறைத்தூதரின் வழிமுறையிலும் நீர் பெறா விட்டால்? என்று நபிகளார் மறுபடியும் திரும்ப வினவ, என் அறிவாற்றலைக் (இஜ்திஹாதைக்) கொண்டு தீர்ப்பளிப்பேன் (நீதி செய்வதில் குறை செய்ய மாட்டேன்) என்று கூறினர் மஆத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள். அதுகேட்ட நபிகள் நாதர் இறைத்தூதரின் தூதருக்கு இறைத் தூதரின் விருப்பத்திற்கிணங்க நற்பாக்கியமளித்த இறைவனுக்கே சர்வ புகழும் என்று நபிகளார் கூறி மஆதவர்களின் நெஞ்சில் தட்டிக் கொடுத்தனர். பார்க்க : மிஷ்காத், பக்கம்-324.

இந்த ஹதீஸ் கியாஸ் பிடித்தலை எத்துனை ஆணித்தரமாக உறுதிப்படுத்துகின்றது பாருங்கள். பின்னும் பெருமானாரது ஜீவிய காலத்தில் இஜ்மாவு என்பதற்கு வாய்ப்பில்லையாதலால் அதுபற்றி மஆத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் இங்கு எடுத்துக் கூறவில்லை.

இவ்வாறு பெரும் பெரும் நபித்தோழர்கள் ஏராளமான சட்டங் களை தமது கியாஸைக் கொண்டு சொல்லியிருக்கின்றனர். அவற் றில் எடுத்துக் காட்டுக்கு ஒன்று,...

"மஹர்" நிர்ணயமின்றி திருமணம் செய்து உடலுறவு கொள்ளு முன்னரே கணவன் இறந்து விட்டால் அப்பெண்ணுக்கு கணவன் தரப்பி லிருந்து மஹர் கொடுக்க வேண்டுமா? என்று இப்னு மஸ்வூத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் வினவப்பட்டபோது, அவள் போன்றுள்ள மற்ற பெண்களது மஹரைப் போன்ற (மஹர் மிஸல்) கொடுக்கப்பட வேண்டு மென கியாஸ் செய்து தீர்ப்பளித்தனர்.
பார்க்க : நஸாயி, பாகம்-2, பக்கம்-188. மிஷ்காத், பக்கம்-227.

இதேபோன்று நபித்தோழர்களில் சிலர் இச்சட்டப் பிரச்னைக்கு தீர்வு கூறும்போது, உடலுறவு கொள்ளாத காரணத்தால் அவளுக்கு மஹர் தேவையில்லையென்றும் கியாஸ் செய்து தீர்ப்பு வழங்கி யுள்ளனர்.

**இனி எண்ணத்தில் நின்றும் அதிகமானவற்றை தவிர்த் துக் கொள்ளுங்கள்.** அல்குர்ஆன், ஸூறா-49, வசனம்-12.

என்னும் திருமறை வசனத்தை மேற்கோள்காட்டி இமாம்களை நிரா கரிப்போர் எழுப்பும் ஆட்சேபணை சரியல்ல. காரணம், இவ்வசனத்தில் வரும் "ழன்னு" (எண்ணம்) என்பதன் கருத்து தீய எண்ணமாகும்.

அதாவது இஸ்லாமியர்கள் மீது தீய எண்ணம் கொள்ளாதீர்கள் என்பதாகும். ஆதலால்தான் இவ்வசனத்தின் பின்தொடர் "கீபத்" என்னும் புறம் பேசுதலைப் பற்றி வருகின்றது. இதில் மேற்படி வசனத் திற்கு இக்கருத்தில்லையெனில் புறம் பேசுவதையும் கியாஸையும் ஒரே இடத்தில் இணைத்துச் சொல்ல என்ன சம்பந்தமிருக்க முடியும்?

**பின்னும் ஆலோசிப்பதனைத்தும் ஷைத்தானில் நின்று முள்ளதாகும்.**

அல்குர்ஆன், ஸூறா-58, வசனம்-10.

என்று வருவதால் எல்லா ஆலோசனைகளும் ஷைத்தானின் காரியமா என்ன? இஸ்லாத்திற்கும், முஸ்லிம்களுக்கும் எதிராக செய்யப்படும் ஆலோசனை தான் ஷைத்தானின் ஆலோசனையாகும். இது போல் தான் எண்ணம் என்பதன் கருத்து தீய எண்ணமாகும் என்பதை நாம் விளங்கிக் கொள்ளலாம்.

மேலும் கியாஸ் என்பதனைத்தும் தீமை தானெனத் திருமறை குறிப்பிடுவதெல்லாம் இறைவனது கட்டளைக்கெதிராகச் செய்யப் படும் கியாஸ் என்பதைப் புரிந்து கொள்ளுதல் நலம்.

உதாரணமாக ஆதம் நபிக்கு ஸுஜூது செய்யென்னும் கட் டளையை ஷைத்தான் கிடைக்கப் பெற்ற போது, தன் நிலையை ஆதத்துடன் கியாஸ் செய்ததன் விளைவு! இறைவனின் கட்டளையை மறுத்து காபிராகிப் போனான். இப்படி கியாஸ் செய்வதுதான் குற்ற மாகும். நாம் விபரிக்கும் கியாஸுக்குரிய அடிப்படை அவ்வாறில்லை யென்பதை உணர்க.

**மேலும் என்னளவில் வஹீ அறிவிக்கப்பட்டதையே நான் பின்பற்றுவேன்.**

அல்குர்ஆன், ஸூறா-7, வசனம்-202.

என்ற இவ்வசனத்தில் வரும் "இன்னமா" என்னும் அரபிச்சொல் மட்டுப்படுத்துவதற்குரிய பதமாதலால் வஹியைத் தவிரவுள்ள மற்றுள்ள இஜ்மாவு, கியாஸ் போன்றவற்றை பின்பற்றலாகாதென் றும், குர்ஆன், ஹதீஸை மட்டுமே பின்பற்ற வேண்டுமெனவும் இவ் வசனம் நமக்கு அறிவுறுத்துகின்றதென இமாம்களை நிராகரிப்போர் சொல்கின்றனர்.

ஆனால் இது தவறாகும். காரணம் இஜ்மாவு, கியாஸின் படி அமல் செய்வதானது அசலில் குர்ஆன் மற்றும் ஹதீஸின் படி அமல் செய்வது தானேயன்றி வேறல்ல என்பதையும், கியாஸ் என்பது திருமறை மற்றும் நபிமொழி உள்ளடக்கிக் கொண்டிருக்கும் கருத்துக் கருவூலங்களை வெளிப்படுத்தக் கூடியது தான் என்பதையும் தெரிந்து

வைத்திருப்பது அவசியம். இவ்வறிவு அவர்களுக்கு இருந்திருந்தால் இக்கேள்வியே வந்திருக்காது.

இறுதியாக கியாஸை மறுத்து அது தேவையற்ற ஒன்றெனக் கூறுவோரிடம் ஒரு வேண்டுகோள். எந்த விஷயங்களில் குர்ஆன் மற்றும் ஹதீஸின் தெளிவுரை கிடைக்கப்பெறவில்லையோ, அவை களில் அல்லது வெளிப் படையாக முரண்பாடு நிகழ்ந்திருக்கும் ஹதீஸ் களில் என்ன செய்வீர்கள்?

உதாரணமாக, விமானத்தில் பயணம் செய்யும்போது தொழு வது எவ்வாறு? ஜும்ஆ தொழுகையில் முதல் ரக்அத்தில் இணைந்து தொழுது கொண்டிருந்தவர்கள் இரண்டாவது ரக்அத்தில் ஜமாஅத்தை விட்டு ஓடிப் போய் விட்டால், அவர்களுக்கு விடுபட்ட அத்தொழு கையை ஜும்ஆ தொழுகையாக நிறைவேற்றுவதா? அல்லது ளுஹ ராக தொழுவதா? என்பன போன்ற கியாஸுக்குரிய மார்க்கச் சட்டங் களில் என்ன மாதிரியான பதில்களை தருவீர்கள்? ஏதேனுமொரு இமாமின் முந்தானையைப் பற்றிப் பிடித்தலே சாலச் சிறந்தது. விபரீதமான போக்கை கைவிட்டு விவேகிகளான இமாம்களது வழி தனைப் பற்றிக் கொள்ள முன்வாருங்கள். இறைவன் நம் அனைவருக் கும் அருள் புரிவானாக. ஆமீன்.